# ஸ்ரீ ராமாநுஜன்—311



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 26 | ஆனந்தஹ வைகாசிமாத வெளியீடு | ஸஞ்சிகை 11


## ஸ்ரீ ராமாநுஜன் கார்யதர்சியின் அறிக்கை.

*(T. A. அக்காரக்கனி அனந்தாழ்வான்)*

அடியேன் ஸ்ரீராமாநுஜன்கார்யதர்சி பதவியை ஏற்றுக்கொண்டு ஓராண்டு நிரம்பிவிட்டது. இப்பன்னிரண்டு மாதங்களில் 106 நபர்களின் சந்தாத்தொகை M.O. மூலம் கிடைத்திருக்கின்றது. 850 நபர்களுக்கு நாம் மாதந்தோறும் பத்திரிகை அனுப்பிவருகிறோம். அவரவர்களுக்கு நாம் தனித்தனியே கடிதம் எழுதமுடியுமா? ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே அடிக்கடி எச்சரிக்கை செய்துவருகிறோம். இது பயன்பெறவில்லையேயென்று மிக வருந்துகிறோம். அச்சுத்தாளின்விலை நாடோறும் க்ஷணந்தோறும் ஏறிக்கொண்டே போகிறது. அச்சுக்கூலியும் அப்படியே. இந்த நிலைமையிலும் பத்ரிகையின் சந்தாத்தொகையை ஏற்றுவதற்கு ஸ்ரீஸ்வாமி அநுமதிகொடுக்கவில்லை. இப்போது வெளிவரும் இப்பத்திரிகை 311 லக்கம் கொண்டது. அடுத்த 312 லக்கத்தோடு ஸ்ரீராமாநுஜனுக்கு வருஷபூர்த்தியாகிறது. அதாவது இருபத்தாறு வருஷபூர்த்தியாகிற தென்றபடி. விஜயதசமியன்று ஆகவேண்டிய புதுவருஷத்தொடக்கம் முன்னுடியே ஆய்விடுகிறதென்பதை ஸ்ரீராமாநுஜன் நேயர்கள் கவனிக்கவேணும்.

முடிவாக அடியேன் அறிவிப்பது இவ்வளவே; அவரவர்கள் தங்கள்தங்கள் சந்தாபாக்கி இவ்வளவென்பதைத் தெரிந்து கொண்டேயிருப்பதால் அதை நாளது ஜூன்மாதம் 15 தேதிக்குள் அனுப்பவேணும். அப்படி அனுப்பாதவர்களுக்கு ஸ்ரீராமாநுஜன் 312 அனுப்புவதை நிறுத்திவைப்போம். அவர்களிடமிருந்து ஏதாவது கடிதம் கிடைத்தால் அப்போது கவனிப்போம். மற்றொன்றும் தெரிவிக்கலாகிறது. சில ஆப்தர்களுக்கும் வித்வான்களுக்கும் நெடுநாளாக பத்ரிகை ஸ்ரீஸ்வாமி நியமனத்தால் இனமாக அனுப்பப்பட்டு வருகிறது. அவர்கள் "இனிமேலும் தொடர்ந்து அனுப்பி வரவேணும்" என்று எழுதிக்கொள்ளவேண்டுவது அவசியம்.

---

# காரிமாறன் தூதும்—காளிதாஸன் தூதும்

காளிதாஸ மஹாகவியின் க்ருதிகளில் மேகஸந்தேச மென்பதொன்று. மேகத்தைத் தூதுவிடுவதாக அமைக்கப்பட்ட காவியமிது. மேலுலகில் குபேரனிடத்தில் பணிவிடை செய்துகொண்டிருந்த வொரு யக்ஷன் ஏதோ தவறு செய்துவிட்டானென்று குபேரன் அவனுக்கு சாபங்கொடுத்தான்—ஒருவருஷகாலம் நீ மண்ணுலகிற் சென்று வருந்தக்கடவாய் என்று. அந்த சாபத்தின் பயனாக அவன் மண்ணுலகில் வந்து வருந்துகையில் ஒரு மலையடிவாரத்திற் சென்று அங்கொரு மேகத்தைக் கண்டு அதனிடம் தனது மனைவிக்கு ஸமாசாரம் சொல்லியனுப்புவதாக இக் காவியம் நிபந்திக்கப்பட்டுள்ளது. ஆகவே இது ஒரு கற்பனைக்காவியம். மேகமென்பது அசேதனமாகையாலே அது இவன் சொல்லுவதை எப்படித் தெரிந்துகொள்ள முடியும்? எப்படி யக்ஷலோகத்திலிருக்கிற மாதுக்குத் தெரிவிக்க முடியும்? என்று சங்கை தோன்றும். இந்த சங்கையைக் கவிதானே (அந்தக் காவியத்திலேயே) ஒரு சுலோகத்தினால் ப்ரஸ்தாவித்து அதற்குப் பரிஹாரத்தையும் அதில் தெரிவிக்கிறார். அந்த சுலோகமாவது;—

"தூமஜ்யோதிஸ்ஸலிலமருதாம் ஸந்நிபாத: க்வ மேக:!
ஸந்தேசார்த்தா: க்வ படுகரணை: ப்ராணிபி: ப்ராபணீயா:,
இத்யௌத்ஸுக்யாத் அபரிகணயந் குஹ்யகஸ் தம் யயாசே
காமார்த்தா ஹி ப்ரக்ருதிக்ருபணாச் சேதநாசேதநேஷு"

என்பதாம். இதன் கருத்தாவது—புகை ஒளி தண்ணீர் காற்று ஆகிய இவற்றின் கூட்டரவான மேகமானது செவி வாய் கண் முதலிய கரணங்கள் செவ்வனே யிருக்கப்பெற்ற பிராணிகளால் தெரிவிக்கத்தக்க செய்திகளை எப்படித் தெரிவிக்க முடியும்? என்பதை அந்த யக்ஷன் ஆலோசியாமலே காமவெறியினால் அந்தமேகத்தை வேண்டிக்கொண்டான்; காமவெறி கொண்டவர்களுக்கு இது சேதநம் இது அசேதநம் என்கிற பகுத்தறிவு இல்லையன்றோ?—என்பதாம். ஆக இங்குத் தூது விடப்படுகிற மேகம் அசேதநவ்யக்தியே யென்றும் அவிவேகத்தினாலேயே தூது விடப்படுகிறதென்றும் முடிக்கப்பட்டது. தேசிகன் ஹம்ஸஸந்தேசத்தில் 'விச்லேஷேணக்ஷுபிதமநஸாம் மேகசைலத்ருமாதௌ யாச்ஞாதைந்யம் பவதி, கிமுத க்வாபி ஸம்வேதநார்ஹே' என்றருளினர். இதில் "ஸம்வேதநார்ஹே" என்றது ரஸிக்கத்தக்கது. மேகம் ஸர்வாத்மநா அசேதநம்; ஹம்ஸம் அப்படிப்பட்டதன்றே என்கை. "மக்கள் தேவர் நரகருயர்திணை, மற்றுயிருள்ளவுமல்லவுமஃறிணை" என்ற தமிழரின் கொள்கைப்படி அன்னப்பறவையும் அசேதநவர்க்கத்தில் சேர்ந்ததாயினும் உண்மையில் அது சேதன வஸ்துவேயாம். (தமிழர்கள் அதை அஃறிணை யென்றதற்குக் காரணம் வேறு. நிற்க.)

ஆழ்வார்கள் மேகத்தையும்தூதுவிடுகிறார்கள், நாரை அன்னம் கிளி முதலான பறவைகளையும் தூதுவிடுகிறார்கள். மேகத்தைத் தூதுவிட்ட யக்ஷனைப்பற்றிக் காளிதாஸ கவி 'காமாந்தனாய் சேதநாசேதநவிவேகமின்றியே தூது விடுகிறான்' என்று சொல்லிவைத்ததுபோலச் சொல்லாமல் ஞானமனுட்டானமிவை நன்றாகவே உடையரான மஹான்களே தூதர்களாகக் கொள்ளப்படுகிறார்களென்பதை ஆழ்வார் தாமே வாய்விட்டு அருளிச்செய்கிறார்.

நம்மாழ்வார் திருவாய்மொழியாயிரத்தில் நான்கு பதிகங்களினால் தூது விடுகிறாரென்பதிருக்கட்டும். முதன் முதலாகத் தூதுவிடத் தொடங்கியது முதற் பிரபந்தமான திருவிருத்தத்தில். அதில் "இசைமின்கள் தூதென்று" என்கிற பாசுரத்தினால் மேக விடுதூதை ப்ரஸ்தாவிக்கிறார். அதற்கடுத்த பாசுரம்—

> "மேகங்களோ வுரையீர், திருமால் திருமேனியொக்கும்
> யோகங்களுங்களுக்கெவ்வாறு பெற்றீர்? உயிரளிப்பான்
> மாகங்களெல்லாந் திரிந்து நன்னீர்கள் சுமந்துநுந்த
> மாகங்கள்நோவ வருத்துந்தவமாமருள் பெற்றதே" என்பதாம்.

இப்பாசுரத்தின் பரம தாற்பரிய மென்னவென்றால், மேகங்களைப்பார்த்தால் திருமாலைப் பார்ப்பதுபோலவே யுள்ளது. "தம்மையே நாளும் வணங்கித் தொழு வார்க்குத் தம்மையேயொக்க அருள்செய்வர்" என்ற கலியன் பாசுரத்தின்படி எம்பெருமானை யொத்திருக்கின்ற பரம பாகவதர்கள் ஸம்ஸாரி சேதநர்களை ரக்ஷிக் கைக்காகத் "தீர்த்தகரராமின் திரிந்து" என்ற பூதத்தாழ்வார் பாசுரத்தின்படி நாற்கடலிலுள்ள தூயபொருள்களைச் சுமந்துகொண்டு உலகமெல்லாம் ஸஞ்சரிக்கை யாகிற ஒரு பெருந்தவம் புரிந்து அதன் பயனாக எம்பெருமானது திருமேனியோ டொத்த திருமேனியையுடையவர்களா யிருப்பதுபோல நீங்களும் பிராணிகளை ரக்ஷிக்கும்பொருட்டு கடல்நீரைப் பருகிக்கொண்டு ஆகாசப் பரப்பெங்கும் ஸஞ்ச ரிக்கையாகிற தவம்புரிகையாலே அதன் பயனாகத் திருமால் திருமேனியை யொத் திருக்கின்றீர்கள்போலும் என்றவாறு. இதனால் தூதுவிடப்படும் மேகங்கள் பரம பாகவதோத்தமர்களே யென்பது காட்டப்பட்டதாயிற்று. இதுமட்டுமேயன்று. திருவிருத்தத்திலேயே வண்டுகளை எம்பெருமானிடம் தூது போகவிடுவதற்காக அழைக்கின்ற ஆழ்வார் 'எம்மீசர் விண்ணோர் பிரானார் மாசின்மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே!' என்கிறார். புருஷகார க்ருத்யம்பண்ணி எம்பெருமான் திருவடிக்கீழ் எம்மைக்கொண்டு சேர்க்கின்ற வண்டுகளே! என்றவிதனால் நாம் காடுகளிலும் சோலைகளிலும் காண்கிற வண்டுகள் விவக்ஷிதங்களல்ல என்பது ஸ்பஷ்டமாகும். இப் பாசுரத்தைத் திருவுள்ளத்திற்கொண்டே ஆசார்ய ஹ்ருத யத்தில் 'சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞான கருமங்களைச் சிறகென்று குரு ஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்யஸ்தாநே பேசும்' என்ற சூர்ணை அருளிச்செய்யப்பட்டது. "மாசின் மலரடிக்கீழெம்மைச் சேர்விக்கும் வண்டுகளே!" என்றவுடனே "வண்டு களோ வம்மின், நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ உண்டுகளித்துழல்வீர்க்கு ஒன்று உரைக்கியம்" என்றருளிச்செய்தது மிகச் சிறந்த கருத்தையுடையது. மதுபமென்று பேர்பெற்ற வண்டுகள் மதுவுண்ணத் தேடிப்போகும் பூக்கள் நீரிலும் நிலத்திலும் மரத்திலுமாக மூன்றிடங்களில் பூப்பவை. தாமரை செங்கழுநீர் முதலானவை நீரில் பூப்பன. மல்லிகை முல்லை முதலியன நிலத்தில் பூப்பன. செண்பகம் பாதிரி பாரிஜாதம் முதலியன மரத்தில் பூப்பன. இது யாவருமறிந்ததே. வண்டுகள் இந்தப் பூக்களை உண்டுகளித்துழலுமவை யென்பதும் யாவருமறிந்ததே. இதை யெடுத்துரைக்கின்ற ஆழ்வாருடைய திருவுள்ளம் என்னவென்று நோக்கவேணும்.

"போந்ததென்னெஞ்சென்னும் பொன்வண்டு, உனதடிப் போதிலொண் சீராம் தெளிதேனுண்டு அமர்ந்திடவேண்டி" என்கிற அமுதனார் பாசுரத்தின்படி

ஸ்ரீ பாதாப்ஜமதுவ்ரதங்களான மஹான்கள் நீர்ப்பூவையும் நிலப்பூவையும் மரப் பூவையும் உண்டுகளிப்பவர்களாம். மரப்பூவென்று *சேணுயர்வானத்திருக்கும் தேவபிரானைச் சொல்லி, *வேதவேத்யந்யாயத்தாலே பரத்வபரமான முது வேதத்தை யநுபவித்துக் களிப்பவர்களைச் சொன்னபடி. நிலப்பூவென்று "மண்மீ துழல்வாய்" என்கிறபடியே நிலவுலகத்திலே ஜனித்து ஸஞ்சரித்த ராமக்ருஷ்ணுத் யவதாரங்களைப் பேசும் ஸ்ரீ ராமாயண ஸ்ரீ பாகவதாதிகளையும் அருளிச்செயல்களை யும் அநுபவித்துக் களிப்பவர்களைச் சொன்னபடி. நீர்ப்பூவென்றது வ்யூஹஸ்தான மான க்ஷீராப்திநாதனைச் சொல்லி, வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்நாநிருத்த மூர்த்திகளாலே ஆவிஷ்க்ருதங்களான பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளைக் கொண்டு அநுபவிக்குமவர்களைச் சொன்னபடி.

ப்ரக்ருதம் மேகவிடுதூதை முந்துறமுன்னம் நாம் ப்ரஸ்தாவித்தபடியால் மேகத்திற்கும் ஆசார்யர்களுக்குமுள்ள ஒற்றுமை நயங்களைச் சிறிது விவரிப்போம். ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் *விண்ணீல மேலாப்புப் பதிகத்திஞல் தூது விடும் மேகம் இன்னதென்பதையும் அடுத்தபடியாக விவரிப்போம்.

1. மேகமானது க்ஷாரமான ஸமுத்ரஜலத்தையுட்கொண்டு மிக மதுர ஜல மாகப் பெய்வதுபோல, ஆசார்யர்கள் துரவகாஹங்களான வேதார்த்தங்களையும் பரமபோக்யமாக்கி ஸர்வோபஜீவ்யமாக வர்ஷிப்பர்கள்.

2. மேகமானது பள்ளமான இடங்களையும் வ்ருஷ்டியினுல் நிரப்புவதுபோல, ஞானிகளும் ஸதுபதேச வ்ருஷ்டிகளினுலே நீசர்களையும் ஜ்ஞான பரிபூர்ணர்களாக் குவர்கள்.

3. மேகமானது ஸர்வதா வர்ஷியாமல் சில கால விசேஷங்களில் வர்ஷிப்பது போல குரவர்களும் ஸமய விசேஷங்களிலேயே ஸதுபதேச நிஷ்டர்களாகின்றனர்.

4. ப்ராப்தகாலங்களில் மேகம் பெய்யாவிடில் உலகில் பலவகைப் பீடைகள் தோன்றும்; இதுபோல ஸமயங்களில் ஸதாசார்ய ஸதுபதேசங்கள் இல்லையாயின் தேஹாத்ம ப்ரமம், ஸ்வஸ்வாதந்த்ர்ய ப்ரமம், அந்யசேஷத்வ ப்ரமம், ஸ்வரக்ஷணே ஸ்வாந்வய யோக்யதா ப்ரமம், ஆபாஸ பந்துக்களிடத்தில் பந்துத்வ ப்ரமம், விஷய ப்ராவண்யம் ஆக இப்படிப்பட்ட பீடைகள் தோன்றும். இப்பீடைகள் தொலைவ தற்காக அர்த்தங்களைப் பொழிவர் ஆசிரியர்கள்.

5. மேகம் எவ்வளவு பெய்தாலும் ஒருநாளும் த்ருப்தியடைவதுமில்லை; கைம்மாறு கருதுவதுமில்லை. அதுபோலவே ஆசிரியர்கள் எவ்வளவு உபதேசங்கள் செய்தருளினுலும் த்ருப்தி யடையாமலும் பிரதியுபகாரம் கணிசியாதே அநந்யப்ர யோஜனர்களாகவும் மேன்மேலும் உபதேசிக்கவே எதிர்பார்த்திருப்பர்கள்.

6. மேகம் சில ஸமயங்களில் சில சில நீர்த்துளிகளைப் பெய்து ஓய்ந்து போம்; சில ஸமயங்களில் போதும் போது மென்னும்படி மஹாவ்ருஷ்டியைப் பெய்து வியக்கப் பண்ணும். இப்படியே ஆரியர்களும் சிலபோது மந்த்ரோபதேசமென்று காதோடே சில அக்ஷரங்களை யுபதேசித்து நிற்பர்கள்; சிலபோது ச்ருதி ஸ்ம்ருதீதி ஹாஸபுராண உபயவேதாந்த ரஹஸ்யஸாரார்த்த அம்ருதங்களை அநவதிகமாக வர்ஷித்து 'இது என்ன மஹா வ்ருஷ்டி' என்று ச்ரோதாக்களை விஸ்மய பரவசராக் குவர்கள். "வேதாந்த வேத்யாம்ருதவாரிராசே:" இத்யாதி நம்பிள்ளை தனியனை நினைப்பது.

7. மேகம் சில விடங்களிற் பெய்யும் நீரானது காய்ந்த இரும்பிலே கொட்டின நீர்போல அஸத்கல்பமாகிறது; சில விடங்களிற்பெய்யும் நீரானது [சுக்திகளிலே] முத்தாக்குகின்றது. அப்படியே ஆசிரியர்கள் சிலரிடத்தில் வர்ஷிக்கும் அர்த்தங்கள் அவர்களின் அநவதானத்தாலும் விஸ்மரணத்தாலும் அஸத்கல்பமாகிறது; சில மேதாவிகளிடத்தில் அநவதிகமான புஷ்டியையடைகின்றது. முத்துமாலைபோல் ஸ்ரீவசநபூஷணாதி நாமங்களினால் பூஷணத்வத்தையு மடைகின்றது.

8. மேகம் பெய்த நீர் ஆறு ஏரி குளம் முதலானவற்றில் தங்கி ஸர்வோப ஜீவ்யமாகிறது; வேறிடங்களில் தங்கினால் அது க்ரஹிக்கவும் அயோக்யமாகிறது. அப்படியே அதிகாரிகளான ஸத்பாத்ரங்களில் ஆசிரியர்கள் தேக்கும் அர்த்த விசேஷங்களானவை 'பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு:' என்று வேதமோதினபடியே ஸதுபதேச பரம்பரையில் உபஜீவிக்க வுரியவையாகின்றன; அவையே அநதிகாரிகளிடம் தங்கி நிஷ்ப்பலமாகின்றன.

9. மேகமானது *எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்* என்கிற குலசேகராழ்வார் பாசுரத்தின் படியே அநந்யகதிகளான பயிர்களினால் ப்ரதீக்ஷிக்கப்பட்டிருந்து, அதுவே எருக்கஞ் செடி முதலானவற்றிலே வர்ஷிக்குமளவில் *நீர்காலத் தெருக்கி லம்பழ விலைபோல் வீழ்வேனை* என்று ஆண்டாளருளிச் செய்கிறபடியே அவற்றுக்கு அபாயகரமாய் முடிகின்றது. இப்படியே ஸதாசார்யர்கள் அருளிச்செய்யும் அர்த்த விசேஷங்கள் ஸ்ரீ மதுரகவி ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வாரால் ஆவலோடு எதிர்பார்க்கப்பட்டிருக்கும்; மற்றையோரிடத்தில் *சாறுவாகமதநீறுசெய்து சமணச் செடிக்கனல் கொளுத்தியே* என்பது முதலான பாசுரங்களிற்படியே தொலைப்பனவாகும். இங்ஙனே மற்றும் பலவகையான ஒற்றுமை நயங்கள் உய்த்துணரத்தக்கன.

(தொடரும்)

## ஸ்ரீமதுபயவே. வானமாமலை வெங்கடரங்காசாரியர் ஸ்வாமியின் பரமபத ப்ராப்தி.



B

இந்த ஸ்வாமி 6—4—1974 தேதியன்று பரமபதித்தாரென்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம். இவர் பாம்பே நகரத்தில் சிறந்த உத்யோகத்தில் அமர்ந்திருந்து ஓய்வு பெற்றபின் சுமார் இருபது வருஷகாலமாக திவ்ய தேசங்களில் மங்களாசாஸனமே போதுபோக்காயிருந்துவந்தார். திவ்யப்ரபந்தங்களைக் கற்று பகவத் விஷயாதிகாரியாகவு மிருந்தவர். "விண்ணவர்க்கு விருந்தாகும் பெருந்தக்கோரே" என்ற அருளிச்செயலின்படி விண்ணவர்கட்கு விருந்தாயினர்.

## அண்ணஸ்வாமி யுபந்யாஸமாலையைப்பற்றின

# *விஞ்ஞாபனம்*

நமது பத்ராதிப ஸ்ரீஸ்வாமி உபந்யாஸங்கள் செய்யத் தொடங்கினதும், உபந்யாஸங்களை யெழுதி அச்சிடத் தொடங்கினதும் 1913-ஆம் வருஷத்திலென்று தெரியவருகிறது. அந்நாள்தொடங்கி அச்சேறியுள்ள உபந்யாஸங்கள் சிறியனவும் பெரியனவுமாக ஆயிரத்திருநூற்றுக்கு மேல் தேறுகின்றன. இவை ஸ்ரீ ஸ்வாமியின் மாதப்பத்திரிகைகளிலும் தனிப்புத்தகங்களிலும் கலசியுள்ளபடியால் இக்காலத்தில் அவற்றைப் பூர்த்தியாக அநுபவிக்க விரும்புமவர்களுக்கு அவை எளிதாகக்கிடைக்க வழியில்லாமலிருப்பதை நோக்கி ஆப்தர்களான சில மஹான்கள் ***“ அண்ணஸ்வாமி உபந்யாஸ மாலை ”*** என்னும் பெயரால் ஒரு பெரிய மாலையைத் தொடுக்கவேணுமென்று திருவுள்ளம் பற்றியதை அடியொற்றி இப் பெரிய பணியில் அடியேன் முன்வந்து அவ்வுபந்யாஸ மாலையைத் தொடுக்கவும் அச்சிடவும் தொடங்கிவிட்டேன். இம் மாலை நூறு மலர்கள் கொண்டதாகும். நூறு உபந்யாஸங்கள் கொண்ட ஒவ்வொரு மலராக வெளியிடலாமென்று முன்னம் உத்தேசித்தேன். அதில் சில அஸௌகரியங்களைக் கருதி, 32 பக்கங்களையுடைய நாலு பாரங்கள் கொண்ட ஸஞ்சிகையாக மாதந்தோறும் வெளியிடுவதாக முடிவுசெய்யப்பட்டது. இது பொதுவான ஸ்ரீராமாநுஜன் வெளியீடன்று; ஸ்ரீராமாநுஜன் (உபந்யாஸ) அநுபந்தமான வெளியீடு. இது வேண்டியவர்கள் இதற்காகத் தனியாக வருடச்சந்தா ரூ. 10 செலுத்தவேண்டும். முதல் மலர் இன்று (ஸ்ரீராமாநுஜனோடுகூட) வெளிவருகின்றது. ஸ்ரீராமாநுஜன் சந்தாதாரர்களுக்கெல்லாம் இது அனுப்பப்படவில்லை. ஒவ்வோரூரிலும் சிற்சில ஆப்தர்களுக்குமட்டுமே அனுப்பப்பட்டிருக்கின்றது. விருப்பமுள்ளவர்கள் பார்வையிட்டு சந்தாத் தொகையுடன் ஆர்டர் செய்தால் அனுப்பப்படும். இவ்வகையாகவே ஸ்ரீ ஸ்வாமியின் ஸம்ஸ்க்ருதோபந்யாஸங்களையும் வெளியிட ஏற்பாடாகும்.

*விலாசம் :—*

**T. A. அக்காரக்கனி அனந்தாழ்வான்,**
*24, தென்னண்டை மாடவீதி,*
*சின்ன காஞ்சீபுரம்*-631503.

# எனது இரவு நினைவுகள் (முன் தொடர்ச்சி)

அடியேனுடைய திருத்தகப்பனூர் மஹா பாஷ்யாந்தம் வியாகரணமதிகரித்தவரென்று ப்ரஸித்தி. இவ்வூரில் வடவண்டை மாடவீதியில் கோயில் கந்தாடை அண்ணன் (ஜடப்ரோல்) தாடி ராமாநுஜாசாரியர் என்றிருந்தவரை இக்காலத்தவர்களும் பலர் அறிவர். அவருடைய திருத்தகப்பனூர் ரங்காசாரியர் என்பவர். அவர் மஹாபாஷ்யாந்த பண்டிதர். அவர்க்கு ''சப்த குஞ்ஜதீபம்'' என்று ராஜ ஸம்ஸ்தானத்தில் விருது அளிக்கப்பட்டிருந்ததாம். காஞ்சியில் ஸ்ரீமத் திருப்புட்குழி ஸ்வாமி யென்று ப்ரஸித்தராயெழுந்தருளி யிருந்த ஸ்ரீக்ருஷ்ணதாதாசாரியர் ஸ்வாமி யென்பவர் அந்த ஜடப்ரோல் ரங்காசாரியர் ஸ்வாமி ஸன்னிதியிலே வியாகரணம் வாசித்தவரென்று ப்ரஸித்தி. அவர் வாசித்து முடித்தபின்பு அடியேனது திருத்தகப்பனூர் சிலருடன் சேர்ந்து அந்த ரங்காசாரியர் ஸ்வாமியிடத்தில் வியாகரணம் வாசிக்கத் தொடங்கி மஹாபாஷ்யாந்த மதிகரித்து முடித்தார். இது நிற்க.

காஞ்சியில் ஸ்ரீமத் காதி ஸ்வாமி (வைகுண்டவாஸியான பிரதிவாதிபயங்கரம் ஜகத்குரு. அனந்தாசார்ய ஸ்வாமி) எழுந்தருளியிருந்த காலத்தில் அவரிடம் அடிக்கடி வித்வான்கள் பலர் ஸம்பாவனை பெறுவதற்கு வருவர்கள். அவரவர்கள் முன்னம் அடியேனுடைய திருத்தகப்பனூரிடம் வந்து தங்களைத் தெரிவித்துக்கொண்டு இவரை முன்னிட்டே ஸ்ரீகாதி ஸ்வாமியைக் காண்பர்கள். ''சேகராந்தம் வாசித்திருக்கிறேன்'' என்று சிலர் வருவர்; ''மஹாபாஷ்யாந்தம் வாசித்திருக்கிறேன்'' என்று சிலர் வருவர். ''காவ்யநாடகாலங்காரங்கள் பூர்த்தியாக வாசித்திருக்கிறேன்'' என்று சிலர் வருவர். அவரவர்களைத் திருத்தகப்பனூர் சிறிது பரீக்ஷிப்பர். ஸித்தாந்த கௌமுதியிலோ சேகரத்திலோ மஹாபாஷ்யத்திலோ பரீக்ஷிப்பதற்கு முன்பு பெரும்பாலும் சப்தமஞ்ஜரியிலும் தாதுபாடத்திலும் ஸமாஸ விக்ரஹங்களிலும் பரீக்ஷிப்பர். அடியேன் பதினூன்காவது பிராய முடிவில் திருத்தகப்பனூரை இழந்தவனுதலால் பன்னிரண்டாவது பிராயம் முதலாகத் திருத்தகப்பனூரிடம் வித்வான்கள் வருவதையும் அவர்கள் பரீக்ஷிக்கப்படுவதையும் அப்போது திருத்தகப்பனூர் ஸாதிக்கும் விசேஷங்களையும் நன்கு அறிவேன். அந்தப் பரீக்ஷைகள் அடியேனுக்கு எவ்வளவோ உபகாரகங்களாயிருந்தன. அவற்றை அடிக்கடி நினைக்கிறேன். அவற்றைத் தெரிவிப்பது ஸம்ஸ்க்ருதபாஷாபிமானிகளுக்கு அத்யந்தம் உபகாரகமாக இருக்குமென்கிற நம்பிக்கையினூல் இங்குச் சிறிது தெரிவிக்கிறேன். எவ்வளவோ தெரிவிக்கவேண்டியவை யுண்டு.

சப்தமஞ்ஜரியில், சுசிசப்தம் கர்த்ருசப்தம் ம்ருதுசப்தம் முதலிய சில சப்தங்கள் நபும்ஸக லிங்கத்திலேயே படிக்கப்பட்டிருக்கின்றன; இவை பும்லிங்கத்தில் கிடையாதா? ஸ்த்ரீலிங்கத்தில் கிடையாதா? இவற்றுக்கு மூன்று லிங்கங்களிலும் பிரயோகம் காண்கின்றதே யென்று (பல பிரயோகங்களை யெடுத்துக் காட்டி) சப்தமஞ்ஜரியில் எதற்காக நபும்ஸகலிங்கத்தில்மட்டும் படிக்கப்பட்டன? சம்புசப்தமும் ம்ருதுசப்தமும் ஒரேவிதந்தானே; தாத்ருசப்தமும் கர்த்ருசப்தமும் ஒரே விதந்தானே. ஹரி சப்தமும் சுசி சப்தமும் ஒரேவிதந்தானே........என்றிப்படி யொரு நாள் ஒரு பண்டிதரைக் கேள்விகேட்டார்; அவர் தலைகாலில்லாதபடி ஏதோ பதில்

சொல்லுகிறார். "சுசி சப்தமும் ஹரி சப்தமும் ஒரே மாதிரியன்று; சம்பு சப்தமும் ம்ருது சப்தமும் ஒரே மாதிரியன்று; தாத்ருசப்தமும் கர்த்ரு சப்தமும் ஒரே மாதிரியன்று" என்று விடைகூறி வாசியை விளக்க அவராலாகவில்லை. இப்படிப்பட்ட பரீக்ஷைகள் பல பண்டிதர்களுக்கு நேரும். தக்க விடை கூறுவாருமுளர். "பாஷ்யாந்தம் வாசித்த வென்னை சப்தமஞ்ஜரியில் பரீக்ஷிப்பது நியாயமா?" என்று முணுமுணுத்துக் கொண்டே எழுந்துபோய்விடுவாரும் சிலர். "பாஷித பும்ஸ்கம் பும்வத் காலவஸ்ய" என்கிற ஸூத்ரத்தைச் சொல்லி யுபபாதித்து த்ருப்திகரமாக விடையளிப்பவர்களுமுண்டு. இத்தகைய கேள்விகள் ஒன்றிரண்டல்ல.

ஒருநாள் ஒரு பண்டிதர் திருத்தகப்பனாரிடம்வந்து ஸ்ரீகுணரத்ந கோசத்தில் "ச்ரிய: ஸ்ரீ:! ஸ்ரீரங்கேசய! தவ ச ஹ்ருத்யாம் பகவதீம் ச்ரியம் த்வத்தோப்யுச்சைர் வயமிஹ பணமச் ச்ருணுதராம்" என்கிற சுலோகத்தை யுபந்யஸிக்கிறார். இதில் இரண்டாவது பாதத்தில் பணம: என்பது க்ரியாபதம். சொல்லுகிறோமென்பது இதன் பொருள். லட்டில் உத்தம புருஷபஹுவசநரூபமிது. இதை அவர் சொல்லி முடித்தவுடனே திருத்தகப்பனார் அவரைக் கேட்டார்—"பணம: என்று விஸர்க்காந்தமாகக் கொள்ளாமல் (பணம) என்று அவிஸர்க்கமாகவுங் கொள்ளலாமன்றோ! லோட் உத்தம புருஷபஹுவசந ரூபம் (பணம) என்றுள்ளதன்றோ? சொல்லக்கடவோம் என்று அதற்குப் பொருளாதலால் அப்பொருளும் ஸம்பாவிதந்தானே, அப்படியும் பதம் பிரிக்கலாமன்றோ?" என்று. அந்தப் பண்டிதர் சற்று ஆலோசித்து "ஆகா, அப்படியுங் கொள்ளலாம், அதிலும் பிசகு ஒன்றுமில்லை" என்றார். பிறகு திருத்தகப்பனார் "நன்றாக ஆலோசித்து ஸாதிக்கவேணும்" என்றார். "இங்கு ஆலோசிக்கவேண்டியது என்ன இருக்கிறது? (பணம:) என்கிற ரூபம்போலே (பணம) என்கிற ரூபமும் சாஸ்த்ரீயந்தானே—என்கிறார் அவர். பிறகு திருத்தகப்பனார் 'இவ்வூரில் பல வித்வான்களிருக்கிறார்கள்; இக்கேள்வியை அவரவர்களிடம் கேட்டுப்பார்க்க' என்று சொல்லி அவரை அனுப்பிவிட்டார். அவரும் எழுந்து போய்விட்டார். அவர் மறுபடியும் திரும்பிவந்ததாக நினைவில்லை. இங்குள்ள மருமத்தைத் திருத்தகப்பனார் அடியேனுக்கு விவரித்து ஸாதித்தார். (பணம:) என்கிற பதத்திற்கு அடுத்தபடி (ச்ருணு) என்கிற பதமுள்ளது. இதில் முதலெழுத்தை நாம் தமிழிலெழுதும்போது (ச்ரு) என்றெழுதுகிறோம். இது ஸம்யுக்தாக்ஷரம்போல் தோன்றும். பலர் (அல்லது) சிலர் உச்சரிக்கும் போதும் ஸம்யுக்தாக்ஷரம் போலவே உச்சரிக்கிறார்கள். உண்மையில் இது ஸம்யுக்தாக்ஷரமன்று. க்ருஷ்ணசப்தத்தில் முதலெழுத்து எப்படி ஸம்யுக்தாக்ஷரமன்றோ அப்படித்தானிதுவும். (ச்ர்ணு) என்றுதானெழுதவேண்டும். (க்ர்ஷ்ண) என்றுதானெழுதவேண்டும். இனி ஸ்ரீ குணரத்நகோச ச்லோகத்திற்கு வருவோம். அங்கு (பணம:) என்று விஸர்க்காந்தமாக இல்லையாகில் வ்ருத்தபங்கமாகும். (ம) என்றிருந்தால் அது லகுவான அக்ஷரமாகும். வ்ருத்த லக்ஷணத்திற்குச்சேர அங்கு குருவான அக்ஷரமிருக்கவேண்டும். (ம:) என்று விஸர்க்காந்தமாக இருந்தால் அந்த விஸர்க்கமானது அடுத்த அக்ஷரத்திற்குத் தக்கபடி சகாரமாக மாறி (ஸம்யோகே குரு) என்ற வியாகரணப்படி லகுவான மகாரத்தையும் குருவாக ஆக்கிவிடும். விஸர்க்கமின்றிக்கே (பணம) என்று பிரித்தால் பொருளில் குறையில்லாவிட்டாலும் வ்ருத்தபங்கம் அபரிஹார்யமாகும். இது நுட்பமாக அறியத்தக்க விஷயமென்று திருத்

தகப்பனார் எனக்குப் பன்னிரண்டாவது பிராயத்தில் ஸாதித்ததை அடிக்கடி நினைக்கிறேன். உண்மையில் இது நுட்பமான விஷயமாகும்.

## தேரழுந்தூராண்டவன் ஸ்வாமி நினைவு

ஸ்ரீமத் பரமஹம்ஸ தேரழுந்தூராண்டவன் சிலபல வருஷங்களுக்கு முன்பு காஞ்சீபுரியில் நித்யவாஸமாக எழுந்தருளினார். எப்படிப்பட்டவர்களையும் ஆவர்ஜநம் செய்யும்படியான வொரு மஹாகுணம் அந்த ஸ்வாமியிடத்திலே குடிகொண்டிருந்தது. யார் அணுகிவந்தாலும் தாமும் விச்ராந்தி கொள்ளாமல் அவர்களுக்கும் விச்ராந்தி கொடாமல் வார்த்தையாடி யருள்வர். மஹாரஸிகர். அந்த ஸ்வாமியின் பரமக்ருபைக்குப் பாத்திரமாக நேர்ந்தது. "அண்ணா! நித்யமும் ஒரு மணி காலமாவது நீர் இவ்விடம் வந்து வார்த்தையாடித்தான் போகவேண்டும்" என்று கடுமையாக நியமித்திருந்தார். அப்படியே சிலகாலம் தினப்படியாகவே சென்று கொண்டிருந்தேன். ஸ்வரூபாநுரூபமாக ப்ரணாமம் செய்தே உட்காருவேன். ஸ்வகீயஸம்ப்ரதாயப்படி ஸக்ருத்ப்ரணாமம் செய்கையில் ஒரு நாள், "அண்ணா! நான் நேற்றிரவு ஒரு கனாக்கண்டேன்; நீர் இங்கு வந்து என்னைப் பலமுறை நமஸ்கரித்ததாகவும் அப்போது நான் 'இன்று என்ன விசேஷம்? பலமுறை நமஸ்காரம் செய்கிறீரே ஏன்?' என்று கேட்க, 'நான் வேதாந்த தேசிக ஸம்ப்ரதாய நிஷ்டன்தானே, அந்த நிஷ்டைக்குச்சேர இப்படித்தானே அநுஷ்டிக்க வேண்டும்' என்று நீர் பதில் சொன்னதாகவும் கனாக்கண்டேன். இன்று ப்ரணாம விஷயமாக உம்மோடு சர்ச்சை செய்ய வேணுமென்று நினைக்கிறேன்; செய்யலாமா?" என்று மந்தஹாஸத்தோடு கேட்டருளினார். அதற்கு விஜ்ஞாபித்தேன்—"தினந்தோறும் எத்தனையோ சர்ச்சைகள் செய்துகொண்டுதானே யிருக்கிறது; இன்று மாத்திரம் பூர்வபீடிகை எதற்காக?" என்று. அதற்கு ஆண்டவன் ஸாதித்தார்—"அந்த சர்ச்சைகளெல்லாம் ஏடுகளோடு நிற்கிற விஷயம்; இது அப்படியல்லாமல் தினப்படி அநுஷ்டானத்திலிருக்கிற விஷயமாகையாலே உம்முடைய அநுஷ்டானத்தை மாற்றிவைக்க வேணுமென்கிற ஆசையோடு இதை சர்ச்சிக்க நினைக்கிறேன். நான் சொல்லுகிற விஷயங்கள் யுக்தமாகத் தோன்றினால் இனிமேல் ஸக்ருத் ப்ரணாமாநுஷ்டானத்தை மாற்றிக் கொண்டு அஸக்ருத்ப்ரணாமாநுஷ்டானத்தைக் கைக்கொள்வீரா?" என்று. (**இடையில் ஆக்கூராண்டவன் ப்ரஸ்தாவம்**) "ஆக்கூராண்டவன்" என்கிற வ்யபதேசத்தோடு பிறகு தேரழுந்தூராண்டவனுடைய ஆஸ்தானத்தை யலங்கரித்திருந்த ஸ்வாமி அப்போது க்ருஹஸ்தராய் காஞ்சீபுரியிலேயே வாஸம் செய்து கொண்டு ஸன்னிதி வீதியில் திருவடி ஸன்னிதியில் ஸ்ரீராமாயணப்ரவசனம் செய்து கொண்டிருந்தார். ஆக்கூர் ரங்கஸாமி ஐயங்காரென்று அவர்க்குத் திருநாமம். அவரும் அடிக்கடி ஆண்டவன் ஸன்னிதிக்கு வருவர். மேலே ப்ரஸ்தாவித்த ப்ரணாம சர்ச்சை ஆரம்பிக்கும்போது அவரும் கூடவிருந்தார். தேரழுந்தூராண்டவன் அடியேனை நோக்கிக் கேட்ட கேள்விக்கு அடியேன் விடை கூறுவதற்கு முன்னே அவர் சொன்னார்—"ஏதோ லோகாபிராமமாக விஷய சர்ச்சைகளைச் செய்யலாமேயொழிய ஸ்வாமி இப்படி கேட்டருள்வது யுக்தமாகாது. ஸக்ருத்

ப்ரஹ்மமே ப்ராமாணிகமென்று அண்ணங்கராசாரியர் ஸ்தாபித்து விட்டால் அவ்வநுஷ்டானத்தை ஸ்வாமிதான் கைப்பற்ற முடியுமா? ஸ்வாமி கேட்டருளுகிற மாதிரி அவரும் கேட்கலாமன்றோ?'' என்றார். பிறகு அடியேன் விஜ்ஞாபித்தேன். ''முற்காலத்தில் வித்யாரண்ய ஸ்வாமிக்கும் அக்ஷோப்ய முனிக்கும் த்வைதாத்வைத விஷயமாய் வாத விவாதம் பிரபலமாக நடந்ததாகவும், தேசிகன் *அஸிநா தத்த்வமஸிநா பரஜீவப்ரபேதிநா, வித்யாரண்ய மஹாரண்யம் அக்ஷோப்ய முநிரச்சிநத்* என்று ஒரு ச்லோக மெழுதியனுப்பி வித்யாரண்யருடைய பராஜயத்தைத் தெரிவித்ததாகவும் புத்தகங்களில் கதையெழுதி வைத்திருக்கிறார்கள். அதனால் அத்வைத மதம் தலை மடிந்துவிட்டதா? நம்மாழ்வார் (திருவிருத்தத்தில்) *வணங்கும் துறைகள் பலபலவாக்கி, மதிவிகற்பால் பிணங்கும்சமயம் பலபலவாக்கி, அவையவைதோறு அணங்கும் பலபலவாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்* என்றருளிச் செய்கிறார். இப்பாசுரத்தின் அர்த்தம் ஸ்வாமி யறியாததன்று. உபயகலாஸம்ப்ரதாயத்திலும் மஹாஜ்ஞாதாக்களாகப் பலபல மஹான்கள் விளங்கிவருகிறார்கள். அவரவர்கள் தங்களுக்குப் பரம்பரயா ப்ராப்தமான அனுஷ்டானங்களிலே ஊன்றி நிற்கிறார்கள். விசாலமான நாடுநகரங்களிலே நெடுநாளாகப் பரவியுள்ள இவ்வநுஷ்டாந பேதங்கள் இன்றாக ஒருவரால் அடியறுக்க முடியுமா? அடியேன் ஸ்வாமியின் வாதங்களுக்கு விடைகூற முடியாமல் பங்கமடைந்து ஸக்ருத்ப்ரஹ்மானுஷ்டானத்தைவிட்டு அஸக்ருத் ப்ரஹ்மாநுஷ்டானத்தைக் கைப்பற்றுகிறேனென்றே வைத்துக்கொள்ளுவோம்; அடியேனொருவன் இப்படி செய்துவிட்டதனாலே என்னாய் விடும்? அல்லது வாதத்தில் தேவரீர் பங்கமடைந்து அடியேனுடைய அனுஷ்டானத்தைக் கைப்பற்றிவிட்டாலும் என்னாய்விடும்? ஒன்றுமாகாது. எந்த அனுஷ்டானத்தில் ஔசித்யமிருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள விமர்சிக்கலாம். சர்ச்சை செய்யலாம்; அத்தனை யொழிய, ஸ்வாமி கேட்கிற கேள்வி நன்றாயில்லையே'' என்றேன். ஆனாலும் அந்த சர்ச்சை விசேஷமாக நடந்தது. அதையெல்லாம் அடியேன் அச்சிட்டு வெளியிட்டுமிருக்கிறேன். ''தேரழுந்தூராண்டவன் ஸன்னிதியில் நடந்த நமஸ்கார சர்ச்சை'' என்று விளங்கக் காட்டியே அவருடைய வாழ்நாளிலேயே அச்சிட்டிருக்கிறேன். என்னுடைய திருப்பாவை திவ்யார்த்த தீபிகை முதற்பதிப்பில் ''கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய:'' என்றவிடத்து தீபிகையில் காண்க. ''நமஸ்கார தத்வம்'' ''நமஸ்காரதத்வ விஜயத்வஜம்'' என்ற தனி நூல்களும் உலகம் பரவியுள்ளன.

### — தோணுங்குளம் ராமாநுஜாசாரியர் நினைவு —

ஸ்ரீமத் தோணுங்குளம் ராமாநுஜாசாரிய ரென்பவர் ஏறக்குறைய அறுபது வருடங்களுக்குமுன்பு கிரஸனையில் வியாபாரத்தில் அளவற்ற செல்வம்படைத்து மஹா தனிகராய் தேவப்பெருமாள் திருவடிகளில் பரமபக்தராய் அபரிமித கைங்கரியங்களைச் செய்பவராயிருந்து வந்தார். அவர் சில பல வருஷங்கள் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கு ரிஸீவராகவும் நீதிமன்றத்தில் நியமிக்கப்பட்டு வேலைபார்த்து வந்தார். அவர்க்கு ஸம்ஸ்க்ருதத்திலோ ஸம்ப்ரதாயத்திலோ அவ்வளவாக ப்ரவேசமிருந்ததில்லை. ஆனாலும் காஞ்சிக்குவந்தபின்பு பெரியார்களை யடுத்துப்பழகி நல்ல விவேகம் பெற்றார். அவர் வைதிகர்களுக்கும் வித்வான்களுக்கும் ஏதாவது வியாஜத்தையிட்டு

ஸன்மானங்கள் செய்துகொண்டேயிருந்தார். ஒருநாள் நூற்றுக்கால் மண்டபத்தில் பண்டிதர்களையெல்லாம் வரவழைத்து ஒரு ஸதஸ்ஸு நடத்தினார். ஸாமாந்ய பண்டிதர்களும் விசேஷ வித்வான்களுமாகப் பலர் குழுமியிருந்தார்கள். ஒவ்வொருவரும் தேவப்பெருமாளைப் பற்றி 10 நிமிஷம் ஏதாவது சொல்லவேணுமென்று அவர் கோரியிருந்தார். இடையிடையே அவரும் சில கேள்விகள் ஜிஜ்ஞாஸு முறையில் கேட்பர். அப்படிக் கேட்டுக்கொண்டு வருகையில், வரதராஜ பஞ்சாசத்தில் ''த்வத் தேஜஸி த்விரதசைலபதே! விம்ருஷ்டே ச்லாக்யேத ஸந்தமஸபர்வ ஸஹஸ்ரபாநோ:'' என்பதையெடுத்து இதன் தாற்பரியத்தை யாராயினுமொரு வித்வான் விளக்கியுரைக்க வேணுமென்று கோரினார். 'தேவப்பெருமாளே! தேவரீருடைய தேஜஸ்ஸை ஆராய்ந்து பார்த்தால் ஸூர்யனைக் காட்டிலும் அமாவாஸ்யை சிலாகிக்கப்படும்' என்பது அந்த ச்லோகப் பகுதிக்குப் பொருள். இது அநாயாஸமாக யாவரும் சொல்லக்கூடியதே. அமாவாஸ்யைக்கு வந்த ஏற்றமென்ன? ஸூர்யனுக்கு வந்த தாழ்வு என்ன? என்பதை உபபாதிக்கவேணுமே; அதையே அந்த ஸ்வாமி கோரினார். இதில் (ஸஹஸ்ரபாநோ:) என்றதில் பஞ்சமீவிபக்தியா? ஷஷ்டீ விபக்தியா? என்று பலர்க்கு மயக்கம். பஞ்சமியே யொழிய ஷஷ்டியன்று. ஆனால் வியாக்கியானம் செய்தவர்கள் அறுதியிடாதே ஏதோ எழுதியிருக்கிறார்களாம். அதனால்தான் இந்தக் கேள்வி விளைந்தது. வித்வான்கள் சிறிது ஆலோசித்துவிட்டு ''இது தேசிக திவ்யஸூக்தி யல்லவா? லேசாகச் சொல்லிவிட முடியுமா?'' என்பார் சிலர்; ''வியாக்கியானம் பார்த்தால் தெரியும்'' என்பார் சிலர்; ''வியாக்கியானத்திலும் தலை சுற்றலாயிருக்கிறது'' என்பார் சிலர்; இப்படியாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அடியேன் இளமையில் திருத்தகப்பனாரிடத்தில் இது பாடங்கேட்டிருந்தபடியால் உத்ஸாஹமாக வெழுந்து தாத்பரியத்தை விளக்கமாக விஜ்ஞாபித்தேன். அதை மீண்டு விவரிக்கிறேன். நூற்றுக்கால் மண்டபத்து உபந்யாஸ நினைவு. இதை ஒரு கதை போல் எடுத்துச் சொன்னேன்; (அதாவது) அக்காலத்தில் ஸ்ரீமத்திருப்புட்குழி ஸ்வாமியை எல்லாரும் ஒப்புயர்வற்ற வித்வானாகச் சொல்லிக் கொண்டிருப்பர்களாதலால் அந்த ஸ்வாமியைத் தேவப் பெருமாளுடைய தேஜஸ்ஸின் ஸ்தானத்தில் வைத்தேன். ஸ்வல்பசாஸ்த்ரஜ்ஞானம் படைத்தவொரு ஸாதாரண வித்வானை ஸூர்யனுடைய ஸ்தானத்திலே வைத்தேன். உண்மையில் ஒரு படிப்புமில்லாதவொரு யதாஜாதனை அமாவாஸ்யையின் ஸ்தானத்திலே வைத்தேன். திருப்புட்குழி ஸ்வாமி சாஸ்த்ரார்த்தம் நடத்தும்போது ஏறக்குறைய அவருக்கு ஸமாநஸ்கந்தரானவொரு ப்ரபலவித்வான் பேசினால் ஏற்றிருக்கும்; அரைகுறை படிப்பாளியானவொரு ஸாதாரண வித்வான் தன்னை ப்ரபல பண்டிதராக நினைத்துச் செருக்குற்றிருந்தபடியாலே தாம் ஏதோ ப்ரதிவாதம் செய்வதாக எழுந்தார்; அதனாலென்னாகும்? நாலு வார்த்தையிலேயே பங்கமடைந்து நின்றார். ஒரு படிப்புமில்லாத யதாஜாதர் ஒருவருளரே, அவரும் அந்த ஸதஸ்ஸிலே யிருந்தார்; அவர் உள்ளபடி தம்மை அஜ்ஞராகவே நினைத்திருப்பவராதலால் தாம் ஒன்றும் வாய்திறக்கவில்லை; அதனால் அவர் பங்கமடைய ப்ரஸக்தியே யில்லையாயிற்று. இடையில் ஒருவர் பங்கமடைந்தாரே, அவர் ஸ்வல்பம் கல்வி கற்றிருந்தபடியாலல்லவோ வாயைத் திறக்க நேர்ந்து அதனால் பங்கமடைய ப்ராப்தமாயிற்று.

அவர் நினைத்தார் 'ஐயோ, நாம் சிறிது கல்விகற்றபடியாலன்றோ இப்படி பங்கமடைய நேர்ந்தது; இந்த யதாஜாதனைப் போலே நாமும் நிரக்ஷரகுக்ஷியாயிருந்துவிட்டால் இந்த பங்கம் நமக்கு நேர்ந்திராதே' என்று நினைத்தார். இதுபோலே தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸின் முன்னிலையிலே பங்கமடைந்த ஸூர்யன், அவ்விதமாக பங்கமடைய ப்ரஸக்தியற்ற அமாவாஸ்யையைக் கொண்டாடி 'நாம் அமாவாஸ்யையாகப் பிறவாமற் போனேமே!' என்று அநுதபிக்க நேர்ந்ததாம். இதுவே இங்கு தேசிகனுடைய திருவுள்ளம். இந்த வர்ணனையினால், ஸூர்ய தேஜஸ்ஸை ஸர்வாத்மநா பங்கப்படுத்தவல்லது தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸு என்பது தேறி நிற்கும். இதனை சமத்காரமாக ஸாதித்திருக்கிறபடி—என்று விரிவாக வுபந்யஸித்தேன். இதைக்கேட்ட ஸதஸ்யர்கள் யாவர்க்கும், விசேஷித்துக் கேள்விசேட்ட அந்த தோணுங்குளம் ராமாநுஜாசார்ய ஸ்வாமிக்கும் பரமானந்தமுண்டாயிற்று. அப்போது ஒருவர்க்கும் அஸூயை தலைகாட்டினதாகத்தெரியவில்லை.

## — இஞ்சிமேட்டழகிய சிங்கரின் சிந்தனை —

நெடுநாள் அஹோபிலமடாஸ்தானத்தை யலங்கரித்திருந்து திருநாடலங்கரித்த ஸ்ரீமத் இஞ்சிமேடு ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் இஞ்சிமேடு ரங்கநாதாசார்ய ஸ்வாமியென்று வ்யபதிஷ்டர். திருப்பதியில் ஸ்ரீமத் புரிசை ஸ்ரீ ரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் நெடுநாள் வாழ்ந்து ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை யதிகரித்து உபயவேதாந்த ப்ரவர்த்தந ப்ரவீணராய் காஞ்சியில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்தார். அடியேனுடைய க்ருஹத்திற்கு அதிஸமீபத்திலேயே ஒரு திருமாளிகையை ஸ்வகீயமாகக் கொண்டு அதில் குடிவாழ்ந்து வந்தார். அப்போது இருவோமுக்கும் மிக நெருங்கிய பழக்கம் ஏற்பட்டது. அனுஷ்டானத்திற்கு வெள்ளக்குள மெழுந்தருள்வர். அடியேனுடைய க்ருஹத்தின் பக்கத்திலுள்ள ஸந்துவீதிவழியாகவே அக்குளத்திற்குச் செல்ல வேண்டுமாதலால் இருவரும் ஒன்றுசேர்ந்தே குளத்திற்குச் செல்வது தினப்படியாக வழக்கம். திரும்புகிற ஸமயத்தில் சேர்த்தி ஏற்படுவது அரிதாகும். செல்லுகிற ஸமயத்தில் நியமேந சேர்ந்துதான் செல்வது. அப்போதைய ஸம்பாஷணைகள் ஐம்பது வருஷங்களுக்கு மேலானாலும் மறக்க முடியாதவை. திருப்பதியில் தாம் வாழ்ந்தபோது ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி பக்கலிலே தாம் அநுபவித்த விசேஷங்களை ஒவ்வொருநாள் ஒவ்வொன்றாக ஸாதித்தருள்வர். மற்றும் அநேக க்ராந்திக விஷயங்களையும் ஸாதித்தருள்வர். இடையிடையே ஸம்ப்ரதாயார்த்த சர்ச்சைகளும் நடைபெறும். கோபதாபங்கள் சிறிதுமில்லாமல் புன்முறுவலோடே ஸாதிப்பர்; தூமுறுவல் கொண்ட முகத்துடனே கேட்டருள்வர். மனச்சாக்ஷியை மீறியோ அப்ராமாணிக வழியை யவலம்பித்தோ விதண்டாவாதமாகவோ ஓரக்ஷரமும் ஸாதிக்கமாட்டார். அந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் விசேஷித்து அநுபவித்த குணமிது. ஸ்ரீமத் பெருங்கட்டூர் கண்டாவதாராசார்ய ஸ்வாமி யென்றொருவர் ஸன்னிதி வீதியிலெழுந்தருளியிருந்தார். அவர் வையாகரணர். கோவில் பாடசாலையில் பல வருஷங்கள் வ்யாகரணப்ரவசநம் செய்து கொண்டிருந்தவர். அந்த ஸ்வாமியின் இயல்வு இஞ்சிமேடு ஸ்வாமியின் இயல்வுக்கு நேர்மாறானது. விஷயசர்ச்சை ஏதேனுமொன்றெடுத்தால், அது எந்த விஷயமானாலும் ஸரி, கோபதாபங்களில்தான் பர்யவஸித்து நிற்குமவர்க்கு. உச்சைருத்கோஷம் ப்ரபலமாயிருக்கும். இஞ்சிமேடு ஸ்வாமியின் கம்பீர ப்ரக்ருதிகளை நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு கனிந்திருக்கும்.

## — கூரத்தில் நடந்ததொரு நிகழ்ச்சியின் சிந்தனை —

காஞ்சீபுரியில் ஸ்ரீமத் அய்யாக்ருஷ்ணஸாமி தாதாசார்யரென்பவரைப் பலரு மறிவர். அவர் ஸம்ப்ரதாய நிஷ்ணாதர். அவர் ஒரு ஸமயம் கூரத்தாழ்வான் திரு நக்ஷத்ரோத்ஸவம் ஸேவிக்கக் கூரம் சென்றிருந்தார். அங்கே பல ப்ரகரணங்களில் அநுஸந்திக்கிற தனியன் ஒன்றுண்டு; அதாவது. [அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வமாச்ரித்ய பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு:; ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாதமநுத கதம் வர்ண்யதே கூரநாத:.] என்பது; இது பட்டர் அருளிச்செய்ததாக ஸுப்ரஸித்தம். இதில் எம்பெருமானாருடைய திருமுடி ஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசாரியர்கள் உஜ்ஜீவித்ததாகவும் பிற்பட்ட ஆசார்யர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினால் உஜ்ஜீவித்துக்கொண்டிருப்பதாகவும் கூறப்பட்டிருக்கிறது. இதைக்கேட்ட அந்த தாதாசாரியர் 'இதெல்லாம் தப்பான ஐதிஹ்யத்தைக் கொண்டு கல்பிக்கப்படுகிற ச்லோகம்; பிற்பட்டவர்களுக்கு ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமென்றால் இது பொருந்தும்; முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமுண்டாயிற்றென்றால் இது அநந்விதமான வார்த்தையல்லவா? இது எப்படி பொருந்தும்? ஸ்ரீமந்நாதமுனிகள் உய்யக் கொண்டார் மணக்கால் நம்பி போல்வார்தானே ஸ்வாமிக்கு முற்பட்டவர்கள்; அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச்சேர்ந்தவர்களன்றோ; அவர்களது காலத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்லஇடமுண்டாம்; இவருடைய அவதாரமே நடந்திலாத ஸமயத்திலே இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமான வார்த்தை என்று உபந்யஸித்து அங்குள்ள யதாச்ருதக்ராஹிகளான ஸ்ரீவைஷ்ணவர்களின் மனத்தை அதிமாத்ரம் குழப்பி விட்டார். இச்செய்தி அடியேனுக்குத் தெரியவந்து உடனே அன்றிரவு மஹோத்ஸவத்திற்கு அங்கே சென்று உபந்யாஸ ஸபை கூட்டி அந்த அய்யா க்ருஷ்ணதாதாசார்யருக்கு வெகு தத்துவங்களையுணர்த்தினேன். அதைச் சிறிது விவரிக்கிறேன்;—

தேசிகன் ந்யாய பரிசுத்தியின் தொடக்கத்தில் எம்பெருமானாரைப் பற்றிப் பணித்த மங்கள ச்லோகத்தில் [பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்த்யமாநவிபவாந் தந்யாந் ததாந்யாந் குரூந்] என்று உள்ளது. இதன் பொருளாவது, ஸம்யமிநாம் பத்யு: சரணௌ ப்ரணம்ய—; தத்பாதகோடீரயோ: ஸம்பந்தேந—அந்த எம்பெருமானாருடைய திருவடியென்ன திருமுடியென்ன இவற்றினுடைய ஸம்பந்தத்தினால், ஸமித்யமாநவிபவாந்—பெருமை பெற்றவர்களாய், தந்யாந்—க்ருதார்த்தர்களான, குரூந் ப்ரணம்ய—ஆசாரியர்களை வணங்கியும்...ந்யாயபரிசுத்தி யென்கிற இந்த க்ரந்தம் செய்யப்படுகிறது என்கை. இதில் தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந'' என்றது உயிரான வார்த்தை. கோடீரமென்று திருமுடிக்குப் பெயர். பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் போல முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தம் உத்தாரகமென்று இதனால் நன்கு காட்டப்பட்டதாயிற்று. இந்த ச்லோகமானது ''அர்வாஞ்சோ யத்பத ஸரஸிஜ த்வந்த்வமாச்ரித்ய'' என்கிற ஆழ்வான் தனியனை யடியொற்றியே

தேசிகன் பணித்தது. [யச்சோபயோஸ் ஸமோ தோஷ: பரிஹாரோபி வா ஸம:] இத்யாதி என்று பரக்கவுபந்யஸித்தேன். அவர் இவை முழுவதும் கேட்டு இதற்குமேல் ஒன்றும் சொல்ல வழியில்லாமையாலே 'இப்படியன்றோ விஷயஞ் சொல்லவேணும்' என்று கொண்டாடிவிட்டு அப்போது ஸாரமாகவும் ரஸமாக வும் சில வார்த்தை சொன்னார்; "ஒரு க்ஷணத்தில் தேசிகனுடைய ஸ்ரீஸூக்தி யைக் கொண்டே என்னை வாய்மாளப் பண்ணின ஏற்றம் இந்த அண்ணாஸ்வாமி யொருவர்க்குத்தான் ஏற்கும். மற்றபேர்கள் ஏதாவது கதை சொல்லிக்கொண் டிருப்பர்களே யொழிய இப்படி ச்ருங்க க்ராஹிகயா ப்ரமாணமெடுத்துக்காட்ட, அதிலும் தேசிக ஸூக்தியையே யெடுத்துக்காட்ட சக்தரல்லர். எங்களுடைய வர்கள் எதையும் ஆழ்ந்து பாராமல் "விதநைதிஹ்யஸஹஸ்ரவர்ணநேந" என்று உபாலம்பம் செய்து போனார்கள். வாயெடுத்ததற்கெல்லாம் பின்புள்ளாரான எங்கடவர்கள் அதையே சொல்லி வருகிறார்கள். நானும் தப்பான ஐதிஹ்ய மென்றே கருதிப் பல பேசிவிட்டேன். ஆழ்வானே க்ஷமித்தருளவேணும்" என்று முடித்துப்போனார். ... ... ... ...

## ஸ்ரீகாஞ்சீ வித்யோல்லாஸிநீ ஸபையின் செய்தி நினைவு

தேவப் பெருமாள் ஸன்னிதியிலிருந்த சடகோப நிலய பாடசாலையில் அவ் விடத்து உபாத்யாயர்கள் சேர்ந்து வித்யோல்லாஸிநீ என்று ஒரு ஸபை ஏற்படுத்தி அதன் மூலமாக அடிக்கடி ஸம்ஸ்க்ருத உபந்யாஸங்கள் நடத்தும் வழக்கமிருந்து வந்தது. 1908 ஆம் வருஷத்திலும் 1909 ஆம் வருஷத்திலும் நிகழ்ந்த செய்தி யிது. அப்போது காஞ்சியில் ஸம்ஸ்க்ருத பாஷைக்கு பஹுமுகமான ப்ரசார மிருந்து வந்தது. அக்காலத்தையும் இக்காலத்தையும் ஒத்திட்டுப் பார்க்கு மிடத்து 'புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம்' என்கிற உத்தரராம சரித ச்லோகமே நினைவுக்கு வருகிறது. அப்போதிருந்த ஸம்ஸ்க்ருத பண்டிதர்களில் ஒருவர் கூட இப்போது இல்லை. அந்த வித்யோல்லாஸிநீ ஸபையின் மூலமாக அடிக்கடி நடந்துவந்த ஸம்ஸ்க்ருத உபந்யாஸங்களில் பலவகைப் பரிசுகள் பெற்றிருந்தேன். பரிசுகொடுக்க அப்போதப்போது பல கனதனவான்கள் கூடு வர்கள். வாரந்தோறும் மூன்று நாட்களில் இரவு எட்டுமணி முதல் பத்துமணி வரையில் அந்த ஸதஸ்ஸு நடைபெறும். இதை யுத்தேசித்து வெளியூர்களிலிருந் தும் வித்வான்களும் வித்யார்த்திகளும் வந்து போவதுண்டு. அதையெல்லாம் இப்போது எழுதுவதில் என்னபயனென்று அடியேனே ஆலோசிப்பதுமுண்டு. வைதவ்யமடைந்தவர்கள் ஸுமங்கலியாய் வாழ்ந்த வாழ்ச்சிகளை நினைப்பதும் பேசுவதுமுண்டே; அதுவுமொரு தாரகமாகுமன்றோ? அந்த வகையில் சிறிது எழுதுகிறேன். அந்த வித்யோல்லாஸிநீ ஸபையின் அத்யக்ஷர் ஒருநாள் சில வித் யார்த்திகளுக்கு ஒரு கட்டளையிட்டார்; (அதாவது) ஸம்ஸ்க்ருதத்தில் மூன்று லேகங் கள் எழுதவேண்டியது; இரண்டு லேகங்கள் கத்யரூபமாகவும், ஒன்று பத்யரூபமாக வும் இருக்கவேண்டும்; கத்யரூபமான லேகங்களில் ஒன்று லௌகிகரீதியிலும், மற் றொன்று சாஸ்த்ரீயஸரணியிலும் அமையவேண்டும்; பத்யங்களைப் பதினைந்துக்குக் குறையாமல் பகவானைப்பற்றி யெழுதவேண்டியது; இதற்கு ஒருவாரம் தவணை என்று நியமித்தார். இந்த நியமனத்தை நிறைவேற்ற முயன்ற அடியேன் லௌகிக

ரீதியில் எழுதவேண்டிய வசன வியாஸத்திற்காக "பாலகோபதேசமாலிகா" என்று இளமையிலெழுதியிருந்த சுருக்கமானவியாஸத்தை வெகு விரிவாக எழுதினேன். சாஸ்த்ரீயஸரணியில் எழுத வேண்டிய வியாஸத்தை தர்மார்த்த காம மோக்ஷங்களென்னும் நால்வகைப் புருஷார்த்தங்களில் தர்மமென்கிற முதல் புருஷார்த்தத்தைப் பற்றி "தர்மவாத:" என்னும் பெயரிட்டு எழுதினேன், மூன்றாவதாக திருப்பள்ளியெழுச்சி யென்னும் திவ்யப்ரபந்தத்தை, பாசுரமொன்றுக்கு இரண்டு ச்லோகங்கள் வீதம் சார்தூலவிக்ரீடித வ்ருத்தத்தில் இருபதுச்லோகங்களாக மொழிபெயர்த்தேன். அப்போது அடியேனுக்குப் போட்டியாக வேறு எந்த வித்யார்த்தியும் எழுத முன்வரவில்லை. மூன்றே நாட்களில் இவற்றை யெழுதி ஸித்தப்படுத்தி அத்யக்ஷரிடம் ஸமர்ப்பித்தேன். ஸ்ரீமான் சாமா திருமலை தாதாசாரியார் அப்போது அத்யக்ஷபதவியிலிருந்தார். அவர் என்னிடத்தில் நல்லெண்ணங்கொண்டவரல்லரென்பது தெரிந்தும் மற்றும்பல பண்டிதர்களின் முன்னிலையில் அவரிடமே கொடுத்து இவற்றை அரங்கேற்ற வேணுமென்றேன். "முன்னம் நான் பார்த்து விட்டு நாளை மறுநாளில் அப்படியே செய்கிறேன்" என்று சொல்லி அவற்றை வாங்கிக்கொண்டார். கொண்டுபோய்ப் பூர்த்தியாகப் பார்த்தார்; வியப்பும் உகப்பும் என்னால் தாங்க முடியவில்லை" என்று சொல்லி வெளியிட்டார். அப்போது பெரியகாஞ்சியில் ஏகாம்பரநாதர் கோவில் தெருவில் பிரபலமாக வொரு ஸம்ஸ்க்ருத பாடசாலை நடந்து கொண்டிருந்தது. அங்குள்ள வித்வான்களுக்கும் வித்யார்த்திகளுக்கும் தெரிவித்து அவர்களையும் வரவழைத்து அவரே முன்னின்று அரங்கேற்றம் நடத்தினார். வைஷம்ய லவலேசத்தையும் காட்டாமல் உதாரஸ்வபாவத்தையே கொண்டு பலவாறு ப்ரசம்ஸித்தார். சிறந்த ஸன்மானமும் செய்வித்தார். இந்த ப்ரஸ்தாவத்தைச் சுருக்கமாக முடிக்கிறேன். இதன் தொடர்ச்சியைக் காண்மின்.

### பாம்பே கேமராஜ ஸேட்டின் பஹுமானம்

பாம்பேமாநகரில் "கேமராஜஸேட், கங்காவிஷ்ணு" என்னுமிருவரைக் கேள்விப்படாதவர்கள் அனேகமாக இருக்கமாட்டார்கள். இவ்விருவரும் ஸஹோதரர்கள்; பாம்பேயிலும் கல்யாணியிலும் மிகப்பெரிய அச்சுக்கூடங்களை ஸ்தாபித்து எண்ணிறந்த க்ரந்தங்களை யச்சிட்டு கோடீச்வரர்களாகப்பெற்றவர்களிவர்கள். இவர்களது க்ரந்தாலயம் இற்றைக்கும் பௌத்ரனுடைய நிர்வாஹத்தில் மிகவும் உன்னதமான நிலைமையில் விளங்கிக் கொண்டிருக்கிறது. அந்த ஸேட்டுகளிருவரும் அப்போது ஸ்ரீரங்க யாத்திரையாகப் புறப்பட்டுக் காஞ்சியில் வந்து தங்கியிருந்தனர். மேலே சொன்ன என்னுடைய க்ரந்தங்களின் அரங்கேற்றம் நடந்த ஸமயத்தில் அவர்கள் தேவப்பெருமாளை ஸேவிக்க வந்திருந்தபடியால் ஸன்னிதிக்குள்ளே வஸந்தோத்ஸவ மண்டபத்தில் பெருந்திரள் குழுமியிருப்பதைக் கண்டு அங்கே வந்து உட்கார்ந்தார்கள், அப்போது எனக்கு புஷ்பமாலாலங்கரணம் முதலியன நடப்பதைக்கண்ட அவர்கள் என்ன விசேஷமென்று பக்கத்திலிருப்பவர்களைக் [ஹிந்தீ பாஷை தெரிந்தவர்] கேட்டார்கள். அவர்கள் மூலம் விஷயத்தைத் தெரிந்துகொண்டு அந்த மூன்று க்ரந்தங்களும் தேவநாகராக்ஷரத்திலேயே ஒழுங்காக எழுதப்பட்டிருப்பதையுங் கண்டு அவற்றை ஒரு வாரத்திற்குள் தாங்கள் அச்சிட்டனுப்புவதாகச் சொல்லி அப்போதே கையில் வாங்கிக் கொண்டுபோய்

ஸ்வஸ்தானம் சேர்ந்தவுடனே நாலேநாளில் அச்சிட்டு எனக்கு ப்ரூப்காபி அனுப்பி விட்டார்கள். கொட்டையான எழுத்தில் வெகு ஆச்சரியமாக அச்சிட்டு விட்டார்கள். உத்ஸாஹ மிகுதியினுல் இரண்டாயிரம் பிரதிகள் அச்சிட்டார்கள். இது நிகழ்ந்தது 1908ல். 65 வருஷங்களுக்கு மேலாகிறது. இதுவரையில் ஆயிரம் பிரதிகளே செலவாகியிருப்பதாகவும், மிச்சம் ஆயிரம் பிரதிகள் க்ரந்தாலயத்தில் கட்டிவைத்திருப்பதாகவும் ஸமீபகாலத்தில் தெரிந்துகொண்டேன். "கேமராஜ ஸ்ரீக்ருஷ்ணதாஸ், ஸ்ரீவெங்கடேச்வர ப்ரெஸ், பாம்பே-4." என்கிற விலாஸத்திற்கு 'பாலகோபதேசமாலிகா தேவை' என்று யார் எழுதினுலும் மூன்றுநாளில் V. P. P. மூலம் புத்தகம் வந்து சேரும். அதில் பாலகோபதேசமாலிகைமட்டுமன்று; தர்மவாதம், ஸ்ரீ ரங்கநாதப்ராபோதிகப்ரபந்த ப்ரதிக்ருதி—என்னும் மற்றை யிரண்டு க்ரந்தங்களும் அத்துடன் சேர்ந்தேயிருக்கின்றன. என்னுடைய இளமைக் கவிதைகளில் இதுதான் அழியாமல் எஞ்ஞான்று மிருப்பது. திருப்பள்ளியெழுச்சி மொழிபெயர்ப்பு ச்லோகங்கள் பாட்டொன்றுக்கு இரண்டிரண்டாக அமைத்தவதில் அஸந்துஷ்டியுண்டாகி, பிறகு ஒவ்வொரு பாட்டையும் ஒரே ச்லோகமாகச் செய்து முத்ரணம் செய்வித்திருக்கிறேன். அது இளமைக்கவிதையன்று.

## நேற்றிரவு சிந்தனை (30-5-74) ஸ்ரீரங்கநாதபாதுகாவைப்பற்றி

நேற்றிரவு நம்மாழ்வாருத்ஸவத் திருவாய்மொழி கோஷ்டியில் உபந்யாஸ க்ரமத்தில் திருவடிகளைப்பற்றி விஜ்ஞாபித்துக் குடில் சோந்தபிறகு வழக்கப்படி இராச் சிந்தனைகள் தோன்றத் தொடங்கின. ஸ்ரீரங்கநாதபாதுகா பத்ரிகையைப் பற்றின சிந்தனையுண்டாயிற்று. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமதாண்டவன் நியமனத்தினுல் மாதந்தோறும் நடைபெற்று வருகிற இப்பத்திரிகை ஆரம்பம் முதற்கொண்டு தவறுமல் நமக்குக் கிடைத்து வந்தது. ஒரு வருஷத்திற்குமேலாகக் கிடைப்பதில்லை, நிறுத்தப்பட்டிருக்கிறது. நாலைந்து மாதங்களுக்கு முன்பு ஸ்ரீமதாண்டவனைச் சென்னையில் ஸேவிக்க நேர்ந்தபோது "பல மாதங்களாகப் பாதுகா பத்ரிகை கிடைப்பதில்லை; நிறுத்தும்படி ஸ்வாமியின் நியமனம் ஏதேனுமுண்டோ?" என்று கேட்டேன். அப்படி நியமிப்பதற்கு என்ன ப்ரஸக்தி? என்று ஸாதித்தாயிற்று. சில வாரங்களுக்கு முன்பு பாதுகா பத்ராதிபர்க்கே ஒரு விண்ணப்பமெழுதிக் கொண்டேன். "அடியேன் சந்தா செலுத்துபவனல்லேனுயினும் ஸ்ரீ ராமாநுஜன் பத்திரிகையைத் தவருது அனுப்பி வருவஞதலால் அந்த முறையில் கேட்கிறேன்; எதனுல் எனக்குப் பாதுகா பத்ரிகையை நிறுத்திவிட்டீர்கள்? நிறுத்தாமல், முன்போல் அவசியம் அனுப்பிவரவேணும்" என்று. அதற்கு பதில் கடிதமுமில்லை, பத்ரிகையும்கிடைப்பதில்லை. இதைப்பற்றிச் சில ஆப்தர்களிடம் பேசிக்கொண்டதில் ஒருவர் சொன்னதாவது—"அதில் தேவரீர் ஏதாவது குற்றங்குறைகள் கண்டு பிரசுரிக்கக் கூடுமென்று நிறுத்திவிட்டதாக அடியேன் காதில் ஒரு ஸமயம் விழுந்தது என்று. அப்படியே மற்றொருவரும் சொன்னர். "குற்றங்குறைகள் கூற நினைத்தால் பத்ரிகை நமக்கு நேராகக் கிடைத்தாகவேணுமென்கிற நிர்பந்தமுண்டோ? காஞ்சியில் சிலர்க்கு அப்பத்ரிகை வந்துகொண்டிருப்பதாகக் கேள்வி; ஒருவரிடமிருந்து அதை வருவித்துப் பார்க்கிறேன்; குற்றங்

குறைகள் கூறவேண்டிய அவசியம் தோன்றினுல் உலகுக்கு உதவி செய்தே தீரு வேன்''—என்றேன். இந்த வார்த்தைகள் நடந்து நான்கு நாளாயிற்று. நேற்றைத் தபாலில் பாதுகா பத்ரிகை (சென்ற மாதத்தில் வெளிவந்தது) ஒரு ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணியினுல் அனுப்பப்பட்டுக் கிடைத்தது. அத்துடன் ஒரு கடிதமும் கிடைத்தது; ''வரலாற்றில் பிறந்த வைணவம்'' என்னுஞ் சுவடியைப்பற்றி ஸ்ரீமதாண்டவனுடைய திருவுள்ளம் இப்பத்ரிகையில் வெளிவந்துள்ளது. கடாக்ஷிக்கவேணும்'' என்றெழுதியிருந்தது. பத்ரிகையைப் பிரித்துப் பார்க்கத் தொடங்கினேன். பத்ரிகையின் முகப்பில் ''ஸ்ரீமத் ஆண்டவன் அனுக்ரஹம்'' என்ற மகுடத்தின்கீழ் நான்கு அநுஷ்டுப் ச்லோகங்கள் வெகுநாளாகவே அச்சிடப்பட்டு வருகின்றன. முதன்முதலாக அவற்றை நாம் பார்த்தபோது ''ஸ்ரீரங்கேச ப்ரியா'' என்கிற மூன்ருவது சுலோகத்தில் ''பக்தி சித்தாநந்த ப்ரதாயிநீ'' என்றிருந்ததைக் கண்டோம்; அப்போதே பத்ராதிபர்க்கு எழுதினேம்—''பக்திசித்த...... என்றிருப்பது அநந்விதம்; 'பக்த சித்த......' என்று ஸ்ரீமதாண்டவன் அநுக்ரஹித்தருளியிருக்கலாம்; அச்சுத் தவருக (பக்தி சித்த) என்று விழுந்திருக்கக்கூடும்; திருத்தினுல் நலம். 'பக்தியையும் சித்தானந்தத்தையும்' என்று த்வந்த்வஸமாஸம் விவக்ஷிதமென்று ஏதாவது பதிலெழுதிக்கொண்டிருக்கவேண்டாம்; 'கீழே பகவத்பக்திஜநநீ' என்றிருப்பதால் அது போதும்.........'' என்று தெரிவித்தோம். உடனே திருத்தி வெளியிட்டார்களப்போது. இப்போது பார்த்ததில் ''பக்தி சித்தானந்த'' என்று பழைய அபத்தமே காண்கிறது. 'இவன் தெரிவித்தா நாம் திருத்திக்கொள்வது!' என்று யாரேனும் கூறியிருக்கலாம். 'வாதத்திற்கு மருந்துண்டு; பிடிவாதத்திற்கு மருந்தில்லை' என்று வசனமுண்டே.

திருவயிந்திரபுரம் சேட்லூர் ஸ்வாமி ''நரஸிஹ்மாசாரியர்'' என்றெழுதி அச்சிட்டுக்கொண்டிருந்தார். நமக்கு அவரோடு ஸௌஹார்தமிருந்த காலத்தில் 'நரஸிஹ்ம' என்பது தவறு; (நரஸிம்ஹ) என்றெழுதவேணும்' என்று தெரிவித்திருந்தோம். யுக்தமென்று க்ரஹித்து அவ்வாருகவே திருத்திக்கொண்டார். பிறகு வாதிப்ரதிவாதி பாலத்தினுல் மாச்சரியம்விளைய, மீண்டும் பழையபடியே (நரஸிஹ்மாசாரியர்) என்றெழுதத்தொடங்கி ஆயுளுள்ளவரை அப்படியே எழுதித் தீர்த்தார். அவர் ப்ரும்மம்–ப்ரும்மம் என்றெழுதிக்கொண்டிருந்த விஷயத்திலு மிப்படியே.

இப்போது கையில்கிடைத்திருக்கும் சித்திரைமாதப் பாதுகையில் நமது கண்ணில்படும் பிழைகள் அபரிமிதம். சிலவேயெடுத்துக்காட்டுவோம். (இதில் பக்கம் 6ல்) வாழ்த்துப் பாமாலை யொன்று வெளிவந்துள்ளது, அதில் ''காப்பு–நேரிசை வெண்பா'' என்கிற முதற்செய்யுளில் 'செந்திருவைச் சீர்குடந்தைச் செல்வியைச் சேவித்து உந்தியடைந்துய்யும் உலகு' என்னும் மூன்று நான்காமடிகளைத் தமிழர்கள் குறிக்கொள்ளவேணும். வெண்பாவுக்கு வெண்டளை உயிரானது. ''காய் முன் நேரும் மாமுன் நிரையும் விளமுன் நேரும் வருவது வெண்டளை''. மேலே குறித்த வெண்பாவின் மூன்ருமடியின் முடிவு ''சேவித்து'' என்றுள்ளது. அடுத்த அடி ''உந்தி'' என்று நேரசையில் தொடங்கியுள்ளது. இங்கு மூன்ருமடியின் முடிவுசீர் மாச்சீரேயாகும். 'சேவித்து' என்று இவரெழுதிவிட்டாலும் இறுதியிலுள்ள துகரம்

தான்காமடியின் முதலெழுத்தேயாகும். (சேவித்) என்பது மாச்சீராகுமேயொழிய கவி நினைக்கிறபடி காய்ச்சீராகாது. இதற்கு அபவாத முண்டென்பரேல் அது மருளேயாகும். அன்றியும் மேற்செய்யுள்கள் பதினாறிலும் "அடைமனமே அடைமனமே" என்றே இட்டிருப்பது தொடையழகுக்குப் பொருந்தாது. கருவிளங் காய்ச்சீர் பயில இயலாத விடம் அது என்றுணரவேண்டும்.

மேலும், பத்தாவது பக்கம் தொடங்கி வெளிவந்துள்ள திவ்யதேசாநுபவம் என்கிற கட்டுரையில் திருமாலிருஞ்சோலைமலையை மதுரையரசனாகிய பாண்டியன் கொண்டாடினான் என்பதற்கு ஆழ்வார் பாசுரங்கள் காட்டுமவர் "குறுகாத மன்னரைக் கூடுகலக்கி வெங்கானிடைச் சிறுகால் நெறியே போக்குவிக்கும் செல்வன்" என்கிற பெரியாழ்வார் பாசுரத்தை எடுத்து இது பாண்டியனுக்கிட்ட பாசுரமென்று கருதி ஏதோ எழுதியுள்ளார். அங்கு எம்பெருமான் விவக்ஷிதனேயொழிய அரசன் விவக்ஷிதனல்லன். "அலம்பாவெருட்டா" என்னும் அப்பதிகத்தில் பாசுரந்தோறும் இரண்டாமடியின் முடிவில் (மலை) என்று வந்துள்ளது. மலைக்கு ஸ்வாமியான எம்பெருமானே அங்கு ப்ரஸ்தாவிக்கப் படுகிறான். ப்ரக்ருத பாசுரத்தில் ......"போக்குவிக்கும் செல்வனான எம்பெருமான் எழுந்தருளியுள்ள மலை" என்பது பொருள்; வேறு வகையான பொருள் சிறிதும் சேராது. இங்கு மிக வருந்தத்தக்கமருள்.

அதிலேயே பக்கம் 32-ல் அமலனாதிபிரான் நான்காம் பாசுரக் கட்டுரையொன்றுள்ளது. அப்பாசுரத்தில் (வரி 4) 'அம்மான்' என்கிற மூலத்திற்கு "ஸ்வாமியுடன் பெருமானின்" என்று பொருள் வரையப்பட்டுள்ளது. இதற்கு என்ன அர்த்தம் என்று அவரே கூறவேண்டும் (சதுர) என்ற மூலத்திற்கு அர்த்தமெழுதும்போது "சதுர என்ற வடமொழி சதிர் எனத் தமிழில் திரிந்துவந்தது" என்றெழுதியுள்ளார். பாசுரத்திலும் அந்த வடசொல்லே யுள்ளதேயன்றி சதிர் என்றில்லை. *சதிரிளமடவாரை நினைத்துக்கொண்டு எழுதினார் போலும்! 'ப்ரும்மம்' 'ப்ரும்மம்' என்கிற ப்ரமம் இவரையும் விடவில்லை. இத்தகைய சிந்தனைகள் எமக்கு நேற்றிரவு நெடுங்காலம் நிகழ்ந்தன. அச்சுத்தாளுக்குப் பஞ்சமான இக்காலத்தில் இவ்வளவே போதுமென்று நிறுத்திக் கொள்கிறேன். இதெல்லாங் கிடக்கட்டும். ஸ்ரீமதாண்டவன் அநுக்ரஹமான முதல் ச்லோகத்தில் "பக்திசித்த" என்பதை "பக்தசித்த" என்று திருத்தினால் பத்ராதிபருடைய ப்ராமாணிகத்வம் பொலியும். ஸ்ரீமதாண்டவன் ஸாக்ஷாத்தாகக் கடாக்ஷித்தருளினால் இத்தகைய அவத்யங்களுக்கு இடமிராதென்று ஸ்ரீஸ்வாமிஸன்னிதியில் பலகால் விஜ்ஞாபித்திருப்பதை ஸ்மாரயே. அச்சாவதற்கு முன்பு ஸ்வாமி திருக்கண் சாத்தியருளினால் ஒரு அவத்யமும் புகாதென் பது எமது திடநம்பிக்கை. இத்தகைய பிழைகளை அடியேன் தவிர வேறுயாரும் தெரிவிக்கத்துணிய மாட்டார்களாதலால் அடியேனுக்குப் பத்ரிகை அனுப்பாமல் நிறுத்தி வைப்பது நன்றே. அடியேனுக்கும் ச்ரமம் குறையும். இப்போது டில்லிமாநகரில் Supreme Court Judge ஆக விளங்கும் உயர்திரு. A. அழகிரிசாமியவர்கள் பலவிடங்களிற் பேசியுள்ளார்—"தவறாக யார் எழுதினாலும் P. B. A. ஸ்வாமி அதைக் கண்டிக்கத் தயங்கவேமாட்டார்" என்று. அதையே நினைப்பூட்டி நிற்கிறேன்.

# அபூர்வார்த்த ரத்னநிதி

(நிகமாந்த குரு ஸூக்தி ரஸாஸ்வாதங்களின் முன் தொடர்ச்சி)

## 137. ஸுபாஷிதநீவியில் ஒரு விசேஷார்த்தம்

"ஏகயைவ குரோர் த்ருஷ்ட்யா த்வாப்யாம் வாபி லபேத யத்,
ந தத் த்ரிஸ்ருபிரஷ்டாபிஸ் ஸஹஸ்ரேணாபி கஸ்யசித்"

என்கிற இந்த சுலோகம் ஆசார்ய கடாக்ஷத்தினுடைய பெருமேன்மையை விளக்கத் தோன்றியது. ஆசார்யனுடைய உட்கண்ணாகிய ஒரு கண்ணினாலோ, வெளிக்கண்ணாகிய இரண்டு கண்களாலோ அடையக்கூடிய பேற்றை மூன்று கண்களாலும் அடைய முடியாது; எட்டுக் கண்களாலும் அடைய முடியாது; ஆயிரங் கண்களாலும் அடைய முடியாது என்பது மூலத்தின் பொருள். முக்கண்ணன்—சிவபெருமான்; எண்கண்ணன்—நான்முகக் கடவுள். இவ்விரண்டும் நிர்விவாதமே. முடிவாக 'ஸஹஸ்ரேணாபி' என்று சொல்லியிருப்பதற்கு ஸஹஸ்ராக்ஷனாய் ஆயிரங்கண்ணுடையனான இந்திரன் விவக்ஷிதனாக வியாக்கியானம் பண்ணியுள்ளார்கள். இது விரஸம். இந்திரன் ஸஹஸ்ராக்ஷனேயாகிலும் இந்த ஸ்தலத்தில் அவனை ஸ்மரிக்க ஔசித்யமில்லை. ப்ரக்ருதச்லோகத்தில் ஞானவிகாஸத்தைப் பண்ணுகையென்னும் விஷயமன்றோ விவக்ஷிதமாகவுள்ளது! சதுர்முக ப்ரஹ்மா ஸரஸ்வதீவல்லபனாய் நால்வேதக்கடலையும் கரைகண்டவனாகையாலே ஜ்ஞானவிகாஸத்தில் அவனுக்கு ப்ரஸக்தியுண்டு. பரமசிவன் ஸர்வஜ்ஞன் என்று பேர்பெற்றவனாகையாலும், * ஈசாநாத் ஜ்ஞாநமந்விச்சேத் * என்று சொல்லப் பட்டிருப்பதனாலும், நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் * நுண்ணுணர்வின் நீலார் கண்டத்தம்மான் * என்று ஞானச்சிறப்பைக் காட்டியருளிச் செய்திருக்கையாலும் அவனுக்கும் ஜ்ஞான விகாஸத்தில் ப்ரஸக்தியுண்டு. இந்தபத்ததியில் இந்திரன் நினைவுக்கு வர ப்ரஸக்தியே கிடையாது. மேலும், இங்கே சிவனை முன்னே சொல்லி, அவனிலும் மேம்பட்ட பிரமனை அவனுக்கடுத்தபடியாகச் சொல்லி, இவ்விருவர்களினும் தண்ணியனான இந்திரனைப் பிறகு சொல்ல ஔசித்யமுமில்லை. ஆகவே * ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: * என்று புருஷஸூக்தத்திலும் * தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க் கண்களாயிரத்தாய் * என்று திருவாய்மொழியிலும் ஆயிரந் திருக்கண்களை உடையவனாகச் சொல்லப்பட்ட ஸ்ரீமந் நாராயணனே இங்குப் பொருளாகத்தகும். ஆசார்ய கடாக்ஷத்தாலே உண்டாகும் பேறு த்ரிமூர்த்திகளின் கடாக்ஷத்தாலும் உண்டாகாது என்று சொல்லுவதே இங்கு ஆசிரியர்க்கு உத்தேச்யமானது. இதுவே ரஸவத்தரம். (இந்த வியாஸமும் அடுத்த வ்யாஸமும் (வைகுண்டவாஸியான) திருச்சி ஏ. வி. கோபாலாசாரியருக்காக எழுதியவை.) .... ....

## 138. ஹம்ஸ ஸந்தேசத்தில் ஒரு விசேஷம் (ச்லோ 1—49ல்)

ஹம்ஸஸந்தேசகாவ்யத்தில் "நித்யாவாஸம் வ்ருஷபமசலம் ஸௌந்தராக்யஸ்ய விஷ்ணோ:.......பாதோ திவ்யம் பசுபதிஜடாஸ்பர்சசூந்யம் விபாதி" என்கிற சுலோகத்திற்குத் தாத்பர்யமெழுதி வெளியிட்ட தேசிகபக்தம்மந்ய பண்டிதர்கள் ,,திருமாலிருஞ்சோலை மலையில் பெருகும் நூபுர கங்கையானது அழகருடைய

திருவடிச் சிலம்புகளிலிருந்து வருகின்ற கங்கையேயானாலும் பகவானுகிற பசுபதியி னுடைய சிரஸ்ஸ்பர்சமாகிற சுத்தியேற்றம் இதற்கில்லையென்று தேசிகன் நூபுர கங்கையினுடைய நிஹீநதையைப் பேசுகிறார்" என்றெழுதி ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகை மூலமாக (1952ல்) வெளியிட்டார்கள். அப்போது நாம் வெளியிட்டதும் உலக முகந்ததுமான வியாஸம் இங்கு அநுபவிக்கத்தக்கது.

*நித்யாவாஸமென்று தொடங்கியுள்ள ஹம்ஸஸந்தேச ச்லோகத்தினால் தூது விடப்படுகிற ஹம்ஸத்தை நோக்கித் திருமாலிருஞ்சோலையழகரை வழியிடை யில் சேவிக்குமாறு கூறப்படுகிறது. அங்குப் பெருகுகிற சிலம்பாறென்கிற நூபுர கங்கையானது ஒன்றான கங்கையிற் காட்டிலும் புனிதமானதென்று கொண்டாடப் படுகிறது. கங்கைக்கு பசுபதிஜடாஸ்பர்சமாகிற ஒரு குறையுண்டு; நூபுரகங்கைக்கு அக்குறைதானும் கிடையாதென்று புகழ்ச்சியே இங்குள்ளது. ச்லோகத்திலிருந்து இப்பொருள் ச்ரமப்பட்டு அறியக்கூடியதன்று; அநாயாஸமாக அறியக்கிடக்கும் பொருள் இதுவே. இந்த நூபுரகங்கையானது பெருமாளுடைய திருவடியினின்று பெருகுகின்ற கங்கையேயாயினும் பரமசிவனுடைய சிரஸ் ஸம்பந்தம் பெறுதபடியி னாலே சுத்தியோகம் சூன்யமாகப்பெற்றது என்று ஒரு பெரிய குறையையேற்றி தேசிகன் இந்த ச்லோகம் பணித்திருப்பதாக எழுதுவது ஸங்கதமாகாது. எம் பெருமானுடைய ஸ்ரீ பாததீர்த்தமான கங்கைக்கு பசுபதியின் சிரஸ்ஸம்பந்தத்தி னால் சுத்தி ஏற்பட்டதாகவும் அது கங்கைக்கு ஓர் ஏற்றமாகவும் காட்டி அப்படிப் பட்ட ஏற்றம் நூபுரகங்கைக்கு இல்லையென்று இங்கே குறைகூறப்படுகிறதாகப் பொருள் விவரிப்பது ஸ்ரீவைஷ்ணவ ப்ருந்தத்தில் ஒருவராலும் ஏற்கத்தக்கதாகாது. தேசிகதிவ்ய ஸூக்திக்கு இது நேர் விபரீதமுமாகும். தேசிகனுடைய தேஹளீச ஸ்துதியில் 12, 13ம் சுலோகங்களை யநுஸந்தித்தால் இப்பொருள் அஸங்கதமென்று எளிதாக அறுதியிடலாகும். *ஸத்குர்வதாம் தவபதம் சதுராநநத்வம் பாதோதகஞ்ச சிரஸா வஹதாம் சிவத்வம் *என்றும், *பாதஸரோஜதஸ்தே மந்தாகிநீ விகஸிதா மகரந்ததாரா....புண்யாபபூவ புரசாஸநமௌலிமாலா* என்றும் அந்தஸ்தோத்ரத் திலுள்ளதன்றோ. வரதராஜ பஞ்சாசத்திலும் *விமலேந யஸ்ய பாதோதகேந வித்ருதேந சிவா பவந்தி* என்று சமத்காரமாகவும் அருளிச்செய்தார். இவற்றுக் கெல்லாம் சிகரமாக ஸ்தோத்ரபாஷ்யத்தில் * கஸ்ய பாதோதகேந ஸ சிவஸ் ஸ்வசிரோத்ருதேந * என்ற விடத்தில் அபார்த்த நிரஸநபூர்வகமாகவும் யதார்த்த மான பொருள் நிலை நாட்டப்பட்டுள்ளது. அங்கு முடிவான ஸ்ரீஸூக்தி– "அத ஏவ * ஹரஸ்ய காத்ரஸம்ஸ்பர்சாத் பவித்ரத்வமுபாகதா இத்யத்ராபி ஹரஸ்ய சுத்தி ப்ரதத்வம் உபாகதேதி போத்தவ்யம்" என்றுள்ளது. இத்தனை ஸ்ரீஸூக்தி களுக்கு விருத்தமாக எழுதியுள்ள பொருள் ஆதரணீயமாகுமா? .... ...

## யதிராஜ ஸப்ததியில் ஓர் ஐதிஹ்யம்

139. * விகாஹே யாமுநம் தீர்த்தம்....யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:* ஆளவந்தார் விஷயமான இந்தஸ்துதிபத்யத்தில் * யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:* என்றதில் குருகை காவலப்பனிடத்து நிகழ்ந்த மிகவற்புதமான ஓர் ஐதிஹ்யம் காட்டப் படுகிறது. 'குருகைகாவலப்பனிடத்திலே யோகரஹஸ்யம் பெறக்கடவீர்' என்று

மணக்கால் நம்பி முன்பு நியமித்திருந்ததை நினைத்த ஆளவந்தார், அப்பன் யோகத்திலேயெழுந்தருளி யிருக்குமிடமான கங்கைகொண்ட சோழபுரத்தேறச் செல்ல, அப்பனும் அங்கே ஒரு குட்டிச் சுவரிலே யோக நிரதராய் எழுந்தருளி யிருக்க, அப்போது அவருக்கு ஸமாதிபங்கம் பண்ணவொண்ணாதென்றெண்ணிய ஆளவந்தார் அந்தச் சுவர்க்கு இப்பால் நிற்க, யோக நிஷ்டரான அப்பனும் திரும்பிப் பார்த்து 'இங்குச் சொட்டைக் குலத்தார் ஆரேனும் வந்தாருண்டோ?' என்று கேட்க, உடனே ஆளவந்தார், அடியேன்! என்று எதிரே சென்று தெண்டன் ஸமர்ப்பித்து 'அடியேன் இங்கு விடைகொண்டது தேவரீருக்குத் தெரியாதபடி பின்னே நிற்க, தேவரீர் அறிந்தது எங்ஙனே?' என்ன, அதற்குக் குருகைகாவலப்பனருளிச்செய்த வார்த்தை:— எம்பெருமானும் நானுமாக அநுபவித்துக் கொண்டிருந்தால் பெரிய பிராட்டியார் திருமுலைத் தடத்தாலே நெருக்கியணைத்தாலும் அவளது முகத்தைப் பாராத ஸர்வேச்வரன் என் கழுத்தை யமுக்கி நாலு மூன்றுதரம் நீரிருந்த பக்கமாக எட்டிப்பார்த்தான்: அப்படி அவன் பார்க்கும்போது சொட்டைக் குலத்தார் ஆரேனும் வந்திருக்கவேணும் என்றிருந்தேன் காணும் என்றார். [ஸ்ரீமந்நாதமுனிகளின் குலம் சொட்டைக்குலமெனப் படும். ஆழ்வார் பக்கலில் எம்பெருமான் பண்ணியிருந்த விசேஷ கடாக்ஷம் அவர்க்குப்பிறகு ஸ்ரீமந்நாதமுனிகள் திருவம்சத்தில் பெருகத் தொடங்கிற் றென்பது இங்கு அறியத்தக்கது.]

இவ்வைதிஹ்யம் திருவாய்மொழியில் (2-6-2) * எங்கும் பக்கநோக்கறியான் என்பைந்தாமரைக் கண்ணனே* என்றவிடத்து ஈடு முப்பத்தாறாயிரத்தில் விஸ்த ரேணவும், பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்துநாலாயிரத்தில் ஸங்க்ரஹே ணவும் ஸேவிக்கத்தக்கது. தேசிகன் காலத்தில் ஈட்டுக்கு ப்ரசாரமில்லாமையினால் இருபத்துநாலாயிரத்தில்தான் ஸ்வாமி ஸேவித்ததென்க. கர்ணபரம்பரயா ச்ரவணமுமொன்றுள்ளதே. "க்ருஷ்ண: க்ருதாதர:" என்பதற்கு *ஸ்ரீமத்க்ருஷ்ண ஸமாஹ்வயரான பெரியவாச்சான்பிள்ளையையும் பொருளாகக் கூறுவதுண்டு; ஸ்தோத்ரரத்னவ்யாக்யாநமுகேந யாமுநே க்ருதாதரஸ் ஸ இதி. இது நிற்க. முந்தின அர்த்தம் பரமபோக்யம். .... .... .... ....

(ஸப்ததியிலேயே ஒரு நிதி காட்டுதல்)

**140 *யதாபூதஸ்வார்த்தா யதிந்ருபதிஸூக்திர் விஜயதே* (சுலோ. 54)**

இதில் "கௌதஸ்குதகலஹ கோலாஹலஹந த்ரிவேதீ நிர்வேதப்ரசமந விநோதப்ரணயிநீ* என்றவிடத்தில் 'த்ரிவேதீ' என்பதற்கு ருக்யஜுஸ்ஸாமங்களா கிற மூன்று வேதங்களென்று அர்வாசீநர்கள் கூறும் பொருள் எடுத்துக் கழிக்கவும் தகாதது. உண்மைப்பொருள் கேண்மின். த்ரயாணாம் வேதாநாம் ஸமாஹார:— த்ரிவேதீ என்கிற ஸமாஸத்தில் விப்ரதிபத்தியில்லை. மூன்று வேதங்களாவன— மூன்று ச்ருதிகள். பேதச்ருதி, அபேதச்ருதி, கடகச்ருதி—என்னுமிவையே அவை. —க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: * * த்வா ஸுபர்ணா * இத்தியாதிகள் பேதச்ருதிகளெனப்படும். *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம *ஐததாத்ம்யமிதம் ஸர்வம்* தத் த்வமஸி* இத்தியாதிகள் அபேதச்ருதிகளெனப்படும். * யஸ்ய ப்ருதிவீசரீரம் ......யஸ்யாத்மா சரீரம்* இத்யாதிகள் கடக ச்ருதிகளெனப்படும். அத்வைதிகள் பேதச்ருதிகளுக்கு க்ஷதியை விளைத்தார்கள். த்வைதிகள் அபேத ச்ருதிகளுக்கு

க்ஷமயை விளைத்தார்கள். இவ்வுபயரும் கடக ச்ருதிகளுக்கு அத்யந்தக்ஷதியை விளைத்தார்கள். யதிந்ருபதிஸூக்தியானது கடக ச்ருதியைக்கொண்டு பேதச்ருதியையும் அபேதச்ருதியையும் விரோதலவலேசமுமின்றிக்கே ஸமந்விதமாக்கின படியாலே ஒரு ச்ருதியையும் க்ஷதமாக்காமலே வெற்றிபெற்றதாயிற்று. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் (2-94) *மிதோ பேதம் தத்வேஷ்வபிலபதி பேதச்ருதி* என்கிற சுலோகத்தினுல் ஸ்வாமிதாமே இவ்வர்த்தத்தை விளக்கியருளினபடியால்*த்ரிவேதீ நிர்வேதப்ரசமநம் ஏவம்விதமாகத்தான் ஸ்வாமிக்கு விவக்ஷிதமென்பதை நிர்மத்ஸரர்களான ப்ராமாணிகர்கள் இசைந்திடுவர்கள். ரஹஸ்யத்ரயஸார—ப்ரதாந ப்ரதிதந்த்ராதிகாரத்தில் * யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம் .......... *இத்யாதி ச்லோகரத்நமருளிச் செய்த ஸ்வாமி திருவுள்ளத்திற்கு வேறுவகையான அர்த்தம் அபிமதமாவதற்கிடமில்லை. .... .... .... .... ....

(திருப்பாவை ஜீயர் விவரணம்)

## 141 ஸப்ததியிலேயே அறுபத்து நான்காவது சுலோகம்

* லிப்ஸே லக்ஷ்மணயோகிந: பதயுகம் * என்கிற சுலோகரத்னம் எம்பெருமானுர்க்குத் திருப்பாவை ஜீயரெனுந் திருநாமத்தை விவரிக்க அவதரித்தது என்க. அலங்கார சாஸ்திரத்தில் பர்யாயோக்தமென்பது ஓர் அலங்காரம். * பர்யாயோக்தம் து கம்யஸ்ய வசோ பங்க்யந்தராச்ரயம் * என்று தல்லக்ஷண முக்தம். நமஸ்தஸ்மை க்ருதௌ யேந முதா ராஹூவதூகுசௌ* என்பது அதற்கு லக்ஷ்யம். அறிவிக்க வேண்டிய அர்த்தத்தை நேர்கொடு நேரே அறிவியாமல் ஒருவிலக்ஷணபங்கியாலே வாக்விந்யாஸம்பண்ணி அதன்மூலமாக [சமத்காராதிசயம் பொலிய] அறிவிப்பது பர்யாயோக்தாலங்காரமென்க. ப்ரக்ருத ச்லோகரத்னத்தில்-ஸ்வாமியெம்பெருமானுர் கிடாம்பியாச்சானை மாஹாநஸிகராகக் கொள்வதற்கு முன்பு மாதுகரம் பண்ணியன்றோ போந்தது. அப்போது திருப்பாவையநுஸந்தானம் செய்து கொண்டெழுந்தருளினமையால் திருப்பாவை ஜீயரென்கிறவ்யபதேசம் ஸ்வாமிக்கு ப்ரஸித்தமாயிற்று. அதுதன்னை இந்த ச்லோகரத்னத்தினுல் தெரிவிக்குமழகு பாரீர். யதிகள் பிக்ஷாபர்யடநகாலத்தில் பாதுகை சாத்திக்கொண்டே யெழுந்தருளவேணுமென்பது நிர்விவாதநியதம். ஆனுல் எம்பெருமானுர் பிக்ஷாகாலத்தில் பாதுகை சாத்திக்கொள்ளவில்லையென்பதை இதில் பூர்வார்த்தத்திலும் உத்தரார்த்தத்திலும் அதிசமத்காரமாகவும் அற்புதமாகவும் காட்டியுள்ளார். (1) *ரத்த்யாபராகச்சடாரக்ஷாரோபணேத்யாதி யாலே திருவீதிப்புழுதிகள் ஸ்வாமி திருவடிகளிலே படிந்துள்ளமை காட்டப்பட்டது. (2) *ஸமுத்ராம்பரா பத்மமகரீ முத்ராம் பிபராஞ்சக்ரே* என்பதனுல் திருவீதிகளில் ஸ்வாமி திருவடிகள் புழுதிபடும்படி நடந்தனவென்பது காட்டப்பட்டது. ஆக இவையிரண்டாலும் பிக்ஷாகாலத்தில் ஸ்வாமி திருவடி நிலை சாத்திக்கொள்ளவில்லையென்கிற ஒரு அர்த்தமே பெறுவிக்கப்பட்டது. பிக்ஷாயாம் ஆவச்யகமான பாதுகாதாரணம் ஏன் வர்ஜிக்கப்பட்டதென்று கேட்கவேணும் என்று ஆசிரியர் திருவுள்ளம். இங்ஙனே விவக்ஷையில்லையென்ருல் இந்த ச்லோகரசனையே நிரர்த்தகமாகும். இதி ஸம்க்ஷேப: .... .... .... .... ...

## 142 "நீணகஞ்சுற்றி"யின் அநுபவம்

பெரிய திருமொழியில் பதினோராம்பத்தின் ஏழாந் திருமொழி "நீணகஞ் சுற்றி" என்று தொடங்குவதாம். செவி, வாய், கண், மூக்கு, உடல் என்னும் ஐம்புலன்களை எம்பெருமான் நமக்களித்தது இவ்வுறுப்புக்களைக் கொண்டு பகவத் விஷயாநுபவம் பண்ணுகைக்கேயன்றி மற்றொரு ப்ரயோஜநத்துக்காகவன்று என்பதைத் திருமங்கையாழ்வார் தாமறிந்தவராகையாலே அதனைப் பிறரும் தெரிந்துகொள்ளும்படி இத்திருமொழி அருளிச்செய்கிறார். தாங்கள் பெற்ற கரணங்களின் உபயோகத்தைத் தெரிந்துகொள்ளாமல் பாழாய்ப்போகிறவர்களை நிந்தித்து எம்பெருமானுடைய செயல்களை அநுபவியாதவர்களின் உறுப்புக்கள் உறுப்புக்களேயல்ல என்கிறார். அவரவர்கள் தாம் தாம் படைத்த கரணங்களைக் கொண்டு பகவத் விஷயத்திலே அவகாஹித்து உஜ்ஜீவநம் பெறுவதே உரியது என்று உபதேசிப்பதிலே இத்திருமொழி நோக்குடையதென்க. இப்பதிகத்தில் "பூணாரமார்வனை ........ காணாதார் கண்ணென்றும் கண்ணல்ல" "........ கேளாச் செவிகள் செவியல்ல" "........ உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக் கொள்ளாமே" என்று பலவாறு அருளிச்செய்கிறார்.

"ஜிஹ்வே!கீர்த்தய கேசவம் முராரிபும் சேதோ! பஜ ஸ்ரீதரம் பாணித்வந்த்வ ஸமர்ச்சயாச்யுதகதா: ச்ரோத்ரத்வய! த்வம் ச்ருணு, க்ருஷ்ணம் லோகய லோசந த்வய! ஹரே: கச்சாங்க்ரியுக்மாலயம் ஜிக்ர! த்க்ராண முகுந்தபாத துலஸீம் மூர்த்தந்! நமாதோக்ஷஜம்" என்ற முகுந்தமாலா ச்லோக ரத்னமும் "கேசவனையே செவிகள் கேட்க திருவரங்கத் தீசனையே சென்னி இறைஞ்சிடுக—நேசமுடன் கண்ணனையே காண்கவிரு கண் இணர்கொள் சாயாம்பூ வண்ணனையே வாழ்த்துக என்வாய்" என்ற ஐயங்கார் பாசுரமும இவ்விடத்திற்குச் சேர அநுபவிக்கத் தக்கது. "கரியவனைக் காணாதகண்ணென்ன கண்ணே! கண்ணிமைத்துக்காண்பார் தம் கண்ணென்ன கண்ணே........நாராயணவென்னா நாவென்ன நாவே!" என்றார் ஜைந முனிவரும். எம்பெருமானைத் தொழாத கை உலக்கை; எம்பெருமானைத் துதியாத வாய் கால்வாய் அல்லது சுண்ணாம்புக் காளவாய் என்று கூறிப் போந்தார் ஒரு ரஸிகர்.

## 143 நுங்கால்களென் தலைமேல் கெழுமீரோ நுமரோடே

ஆழ்வாருடைய தூதுபதிகங்கள் நான்கில் கடைசியான தூது பதிகம் *எங்கானலகங்கழிவாய்* என்பது. அதில் முதற்பாட்டில் நான்காமடி "நுங்கால்கள் என் தலைமேல் கெழுமீரோ நுமரோடே" என்பதாம். செங்கால மடநாரையைத் தூதுவிட்டுமீண்டுவந்துதமது திருமுடியின் மீதுகாலை வைக்கும்படி வேண்டுகிறாரிதில். இங்கே ஒரு இதிஹாஸம் நினைவூட்டுகிறோம். "ஆழ்வார் தூது விடுகிற பறவைகள் இன்னார் என்பதை கையும் காலும் கொண்டு அறியலாம்" என்று நம்பிள்ளை திருவடிகளில் ஒருவர் ஸாதிப்பராம். அதற்கு தாத்பர்யமென்னவென்றால் தூது விடப்படுகிற பறவைகளுக்குக் கை கிடையாதென்பது யாவருமறிந்தது. அப்படி யிருக்க ஆழ்வார் "வைகல் பூங்கழிவாய் வந்துமேயுங் குருகினங்காள்! .... கைகள்

கூப்பிச் சொல்லீர் வினையாட்டியேன் காதன்மையே" என்கிறார். மேலும் அப்பதிகந்தன்னிலேயே "புணர்த்த கையினராய் அடியேனுக்கும் போற்றுமினே" என்கிறார். இங்ஙனே கைகளைப்பற்றிச் சொல்வதனால் என்ன அறிகிறோம்? கையில்லாத பறவைகளை ஆழ்வார் நெஞ்சாலும் நினைத்திலர். "ஸாக்ஷாந் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா" என்கிறபடியே ஞானக்கை தருபவர்களான ஆசார்யர்களையே ஆழ்வார் பறவைகளாக அபதேசிக்கிறார் என்பது விளங்கும். "கையும் காலும் கொண்டு அறியலாம்" என்ற ஸ்ரீஸூக்தியில் கையைக்கொண்டு அறியும் விதம் நிரூபிக்கப்பட்டது. இனி காலைக்கொண்டு அறியும் விதம் கேண்மின். செங்காலமடநாராய் என்று விளித்து "நுங்கால்களென் தலைமேல் கெழுமீரோ நுமரோடே" என்று அருளிச்செய்கிற ஆழ்வார்தம் திருவுள்ளத்தை உய்த்துணரவேணும். தூது விடப்படுகிற பறவையின் காலைமட்டும் விவக்ஷியாமல் (நுமரோடே) என்று அப்பக்ஷியின் ஸம்பந்தம் பெற்றவற்றின் கால்களையும் விவக்ஷிக்கிறார் என்பது வ்யக்தம். ஆபஸ்தம்ப ஸூத்ரத்தில் "ஆசார்யவத் ஆசார்யதாரேஷு ஆசார்ய புத்ரே ச வ்ருத்தி: உச்சிஷ்டாசநவர்ஜம்" என்று கூறப்பட்டுள்ளது. இதன் பொருள் யாதெனில் ஆசார்யர் எப்படி உத்தேச்யரோ அப்படியே ஆசார்யருடைய தேவியாரும் திருமகனும் உத்தேச்யர். ஆனால் போனகம் செய்த சேடம் மட்டும் ஆசார்யரிடத்தில் மாத்திரமே கொள்ளத்தக்கது என்பது. இதனால் இங்கு (நுமரோடே) என்றதன் கருத்து விளங்கிற்றல்லவா? ஆசார்யர் தூதக்ருத்யம் செய்தருளி எம்பெருமானோடே தன்னைச் சேர்ப்பித்தால் கைம்மாறாக அவருடைய திருவடிகளையும் வணங்குகிறேன் என்று அருளிச்செய்ததாயிற்று. இதுதான் காலைக்கொண்டு உணரும்படி. இங்கு ப்ராஸங்கிகமாகக் கூறவேண்டிய விஷயங்களை (இவ்விதழிலேயே) "காரிமாறன் தூதும் காளிதாஸன் தூதும்" என்கிற வியாஸத்தில் விரித்துரைத்தோம். அங்கே கண்டுகொள்க.

## 144 நூறுதடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்

நாச்சியார் திருமொழியில் ஒன்பதாவது திருமொழியாகிற * சிந்துரச் செம்பொடியில் ஆறாவது பாசுரமாகிய "நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான் நூறுதடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவி வைத்தேன், நூறுதடா நிறைந்த வக்கார வடிசில் சொன்னேன் ஏறு திருவுடையான் இன்று வந்திவை கொள்ளுங்கொலோ!" என்பதும் இதற்கடுத்த பாசுரமாகிய "இன்று வந்தித்தனையும் அமுது செய்திடப்பெறில் நான் ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்னு மாளுஞ் செய்வன் தென்றல் மணங்கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள் நின்றபிரான் அடியேன் மனத்தே வந்து நேர்படிலே' என்பதும் இப்பதிகத்தின் போக்குக்கு அடியோடு சேராதவையாகக் காணப்படுகின்றன. கீழே "சிந்துரச் செம்பொடிப்போல்" என்று தொடங்கி நிகழ்ந்த ஐந்து பாசுரங்களும் ஹாஹாகாரமயமாகவுள்ளன. நாறுநறும்பொழிலுக்கு முன்னே "ஐம்பெரும் பாதகர்காள் அணிமாலிருஞ்சோலை நின்ற எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கென் செய்வதே" என்று குயில் முதலானவற்றை விளித்து அவற்றை ஐம்பெரும்-

பாதகர்களாக நிந்திக்கிறாள் ஆண்டாள். அதற்கடுத்த பாசுரத்திலும் "நான் சாகக்கிடக்கிறேன்; எனக்குப் பிழைக்கும் வழி சொல்லுங்கள்" என்னுமாபோலே பேசியிருக்கிறாள். இத்தகைய நிலைமையில் திருமாலிருஞ்சோலை நம்பிக்கு நூறு தடா வெண்ணெயும் நூறு தடா அக்கார வடிசிலும் ஸமர்ப்பிக்க என்ன ப்ரஸக்தி? மகிழ்ச்சி மிக்குச்செய்யவேண்டிய காரியமல்லவா அது? உயிருக்கு மன்றாடுகிற இந்த தசையில் இது கூடுமா என்கிற சங்கை தோன்றும். இங்கு ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றுகிற படியாவது—முதலிட்டு ஐந்து பாசுரங்களில் அபரிமிதமான துயரை அனுபவித்தாள் ஆண்டாள். அதனால் மிகவும் தளர்ந்து த்வயாநு ஸந்தானம் பண்ணினாள். அதில் உத்தரகண்டத்தை அதிகமாக ஊன்றியநு ஸந்தித்தாள். அந்த உத்தரகண்டத்தின் அர்த்தம் கைங்கர்ய ப்ரார்த்தனை. கைங்கர்யமொன்றும் செய்யமுடியாதபடி தளர்ந்திருக்கும் நிலைமையாகையாலே வாசிகமான கைங்கர்யம் செய்ய விரும்பினாள். அது செய்த படியைச் சொன்ன பாசுரங்கள் இவையிரண்டும். இனி, வ்யாக்யான ஸ்ரீஸூக்திகள் வருமாறு.

(வாய் நேர்ந்து) 'நூறுதடாநிறைந்த வெண்ணெய்' என்று பெண்பிள்ளை ப்ரார்த்தித்து வைத்தாள்; கொடுத்தாளாகச் சொல்லக் கேட்டிலோம்; பாரித்த வற்றையிறுக்கை அஸ்ஸந்தாநஜாதகர்க்கு பரமிறே என்று தாம் அமுது செய்யப் பண்ணியருளினாராம். (எம்பெருமானார்) "அங்யத் பூர்ணாதபாம் கும்பாதங்யத் பாதாவநேஜநாத்" என்கிறவஸ்துவுக்கு நூறுதடா நிறைந்த வென்று இங்ஙனே போரச் சொல்லுவானேன்? என்று நான் ஜீயரைக் கேட்டேன்; திருவாய்ப்பாடியிலைச்வர்யத்துக்கு இதெல்லாம் கூடினாலும் ஒரு பூர்ணகும்பஸ்தாநீயமென்றருளிச் செய்தாரென்று அருளிச்செய்வர். (ஏறு திருவுடையான்) வங்கிப்புரத்து நம்பி ஸ்ரீ பாதத்திலேயாயிற்று சிறியாத்தான் ஆச்ரயித்தது. போசள ராஜ்யத்தில் நின்றும் வந்தநாளிலே ராஜகேசரியிலே ஆச்சான் நடந்திருந்தானாய், காணவேணு மென்று அங்கே சென்று கண்டிருக்கிறவளவிலே, நம்பி எனக்கிங்ஙனே பணிக்கக் கேட்டேன்;—"பாஹ்யஸமயங்களிலுள்ளாரும் ஒருவன் தலைக்கொண்டு அது தனக்கு ஜ்ஞாநாதிக்யத்தையு முண்டாக்கிக் கொள்ளா நின்றார்கள்; அவர்களிற் காட்டில் வைதிகஸமயமான நமக்கேற்றம், 'ச்ரிய: பதியாச்ரயணீயன்' என்று பற்றுகிற விதுகாண்" என்று பணித்தானாம்.

## 145 நெஞ்சமே நல்லை நல்லை

ஆழ்வார்கள் அடிக்கடி நெஞ்சைவிளித்துப் பேசுகிறார்கள். நம்மாழ்வாருடைய பாசுரங்களில் அது அதிகம். "நெஞ்சமே! நல்லை நல்லை உன்னைப் பெற்றாலென் செய்யோம்? இனி யென்ன குறைவினம்" என்கிறார் ஓரிடத்தில். "கண்டாயே நெஞ்சே கருமங்கள் வாய்க்கின்று, ஓரெண்டானுமின்றியே வந்தியலுமாறு" என்கிறார் மற்றோரிடத்தில். "கேட்டாயே மட நெஞ்சே கேசவனெம் பெருமானைப் பாட்டாய பல பாடிப் பழ வினைகள் பற்றறுத்து நாட்டாரோடியல்வொழிந்து நாரணனை நண்ணினமே" என்றார். மற்றும் பெரிய திருவந்தாதி தொடங்கும்போதே "முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே இயற்றுவாய் எம்மொடு நீ கூடி" என்றார். "ஊனில் வாழுயிரே நல்லை போ" என்கிறார். இப்படிப்பட்டபாசுரங்கள் பல நூற்றுக்கணக்கில் தேறும். அந்தப் பாசுரங்களின் வியாக்கியானங்களை ஸேவிக்கும் பொழுது நெஞ்சு நீர்ப்பண்டமாக உருகுகின்றது அவற்றை நம்முடைய திவ்யார்த்த தீபிகையுரையில் கண்டு கொள்வது.

# 146 நேராதனவொன்று நேர்ந்தாள்

சிறிய திருமடலில்—"செங்குறிஞ்சித்தாரார் நறுமாலைச் சாத்தற்குத், தான்
பின்னும் நேராதனவொன்று நேர்ந்தாள்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது.
இதற்குப் பூருவாசாரியர்களின் வியாக்கியானமில்லையேல் ஒருவராலும் பொருள்
தெரிந்துகொள்ள முடியாது. வியாக்கியானமிருந்துங் கூடப் பலர் நேரான
பொருளையுணரப் பெறாமல் மிகத் தவறான பொருளையெழுதியுள்ளார்கள். இங்குச்
சிறிது விவரணம் காட்டுவோம். அதில், "ஏராரிளமுலையீர்! என்றனக் குற்றது
தான் காரார் குழலெடுத்துக்கட்டி, கதிர்முலையை வாராரவீக்கி மணிமேகலை
திருத்தி, ஆராரயில் வேற்கணஞ்சனத்தின் நீறணிந்து சீரார் செழும்பந்து
கொண்டடியா நின்றேன் நான், நீரார் கமலம்போல் செங்கண்மாலென்றொருவன்,
பாரோர்களெல்லாம் மகிழப் பறைகறங்க, சீரார் குடமிரண்டேந்தி, செழுந்தெருவே
ஆராரெனச் சொல்லி ஆடுமது கண்டு, ஏராரிளமுலையார் என்னையருமெல்லாரும்
வாராயோ வென்றார்க்குச் சென்றேனென் வல்வினையால் காரார் மணிநிறமும்
கைவளையும் காணேன் நான் ஆரானும் சொல்லிற்றுங் கொள்ளேன் அறிவழிந்து
தீராவுடம்பொடு பேதுறுவேன் கண்டிரங்கி ஏரார் கிளிக்கிளவி எம்மனைதான்
வந்தென்னை சீரார் செழும்புழுதிக் காப்பிட்டுச் செங்குறிஞ்சித் தாரார் நறுமாலைச்
சாத்தற்குத் தான்பின்னும் நேராதன வொன்று நேர்ந்தாள்" என்பதன் தாத்
பர்யச் சுருக்கம் வருமாறு—"ஓ மங்கைமீர்! எனக்கு நேர்ந்ததொரு அவஸ்தையைச்
சொல்லுகிறேன் கேளுங்கள்; நான் உலகத்தில் ஸம்ஸார வாழ்க்கைப்
பெண்டுகள் செய்கிறபடியே தலைமயிர் முடியை எடுத்துக் கட்டிக் கச்சு அணிந்து
கொண்டு அரையிலே மேகலை தரித்துக் கண்ணிலே மையிட்டு இப்படி அலங்காரங்
கள் செய்துகொண்டு பந்தடிக்கும் விளையாட்டிலே ஊன்றியிருந்தேன். இருக்கை
யில் தாமரைக் கண்ணனென்று பேர்பெற்றானொருவன் அனைவரும் மகிழப்
பறையறைந்துகொண்டு "இக்கூத்துக்குத் தப்பிப் பிழைக்கும் பெண்டிரும் இத்
தெருவே உண்டோ?" என்று சொல்லிக்கொண்டு குடக்கூத்தாடா நின்றமை
கண்ட பெண்டிர்களெல்லாரும் "அடி பரகால நாயகி! குடக்கூத்துக் காண நீயும்
வரமாட்டாயோ" என்றழைக்க, போதாதகாலம் வலிதாயிருந்தபடியால் நானும்
சடக்கெனவெழுந்து அங்கே சென்றேன். சென்றதும் மேனி நிறமிழந்தேன்;
கைவளைகள் கழன்றொழியப் பெற்றேன். ப்ரியஹிதபரர்கள் சொல்லுமதைக் காது
கொடுத்துங்கேட்கமாட்டாத நிலைமையளாயினேன்; அறிவென்பது அடியோடே
போயிற்று; சரீரம் ஒழிந்தால் ஆறியிருக்கலாமே; அதுவும் ஒழிந்ததில்லை;
பேதைமை மிக்கது, இங்ஙனேயான என்னை என் தாய் கண்டு வருந்தி எப்படியாகிலு
மென்னைத் தெளிவிக்க வேண்டி பாகவத ஸ்ரீபாததூளியைக்கொண்டு காப்பிட்
டாள்; செங்குறிஞ்சி மாலையை நிரூபகமாகவுடைய சாஸ்தா என்னும் தேவதாந்
தரத்திற்கு ஓர் அஞ்சலியும் செய்தாள்—என்பது கருத்து. இங்கு மூலத்தில்
"நறுமாலைச் சாத்தற்கு" என்று சகரவொற்றுடன் ஓதவேண்டியிருக்க, அஃதின்
றிக்கே "நறுமாலை சாத்தற்கு" என்று தவறாகவே பெரும்பாலும் ஓதிவந்தபடியால்
"மாலை சாத்தற்கு-மாலையைச் சாத்திக்கொள்வதற்கு" என்று பலரும் பொருள்
கூறிவருவதும், சிலர் எழுதிவைத்திருப்பதும் வருந்தத்தக்கது. அது நிற்க
"பின்னும் நேராதனவொன்று நேர்ந்தாள்" என்பதற்குப் பெரிய வாச்சான்
பிள்ளையின் வியாக்யான ஸ்ரீஸூக்தி ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்களுக்கே
நிலமானது. ரஸிகர்கள் ஸேவிப்பது. .... .... ....